புகழேந்திப்புலவர்

இயற்றிய

# ஏணி யேற்றம்

சித்திரப்படப் பதிப்பு

*Approved by the Text Book Committee.*

MADRAS:

1914

மாதர் மஞ்சரி: மலர் - 1

புகழேந்திப்புலவர்

இயற்றிய

# ஏணியேற்றம்



சித்திரப்படப் பதிப்பு.



# முகவுரை.

## புகழேந்திப்புலவர் சரித்திரம்.

**மா**தர்மஞ்சரியின் முதன் மலராகிய ஏணியேற்றம் என்னும் இந்நூலைப் பாடிய புகழேந்திப்புலவர் என்பவர்,

*நூலாசிரியர் பிறந்த இடமும் குலமும்.*

"மேற்குப் பவளமலை வேங்கட நேர்வடக்காம்
ஆர்க்கும் உவரி அணிகிழக்குப்—பார்க்குளொளிர்
தெற்குப் பிஞகி திகழிருப தின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு"

என்றபடி அமைந்துள்ள இத்தொண்டை நாட்டில், செங்கற்பட்டுக்கு அருகிலுள்ள பொன்விளைந்த களத்தூரிலே, துளுவ வேளாளர் குல மலையில் மருந்தெனத் தோன்றியவர்.

இவர், இளம்வயதிலேயே கல்விகற்கத் தொடங்கி, செந்தமிழ் இலக்கிய இலக்கணக்கடலைத் தமதறிவென்னும் மந்தரத்தாற் கடைந்து, புலமையென்னும் அமுதம் வாய்க்கப்பெற்றவர். இப்பேர்ப்பட்ட செந்தமிழ்ப் புலவர் திலகர், பாண்டிநாட்டுக்குச் சென்று, ஆங்குள்ள தீங்கவிவாணரோடு

*வரகுணபாண்டியனுடைய வாயில்வித்துவானுயமர்ந்தது.*

[1]"உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்"

என்றபடி அளவளாவியிருக்க எண்ணி,

பொன்னுடு மணிநாடு புலவரெலாங் களிதுளும்பிப் புகழ்ந்து பாடும்
எந்நாடும் இந்நாட்டுக் கில்லையிணை யென்றிறைவன் இரங்கி யந்நாள்
பன்னுடு பலவிளைத்தெம் பசுபோதம் அறவெறிந்து பறித்த நாடு
சொன்னுடு தமிழ்நாடு சுருதிபுகழ் தென்பாண்டிச் சோதி நாடு

சென்று அங்கே அக்காலத்தில் ஆண்டிருந்த வரகுணபாண்டியன் இரண்டாவனுடைய வாயில் வித்துவானுய் அமர்ந்திருந்தனர்.

---

1 இதன் பதப்பொருள்:—புலவர் - கற்றறிந்தவரது, தொழில் - செய்கையாவது, உவப்ப - (யாவரையும் அவர்) மகிழும்படி, தலைக்கூடி - சேர்ந்து, உள்ள - (இனி இவரை நாம் எப்போது கூடுவோமென்று) நினைக்கும்படி, பிரிதல் - நீங்குதலாகிய, அனைத்து - அத்தன்மையதாம் என்றவாறு.

இங்ஙனம் இவர், பாண்டியன் சபையிற் பாவாணராக விளங்கி யிருக்கையில், சோணாட்டையாண்டிருந்த குலோத்துங்க சோழன் முதலாவனுக்கு, அவனுடைய போதகாசிரியரும் சமஸ்தான வித்துவானுமாகிய ஒட்டக்கூத்தர் என்பவர், பாண்டியன் மகளை மணம் பேசி முடிக்க வந்தனர். வந்தவர், வதுவைகுறித்து வரகுணனோடு வார்த்தை சொல்லிக்கொண்டிருந்தனர்.

**பெண்பேசப் பாண்டியன் சபைக்கு ஒட்டக்கூத்தர் வருதல்.**

அங்ஙனம் இருக்கையில் அவன், அவரை நோக்கி, "புலவீர்! உமது மன்னன் எமது மகளை மணக்கத் தக்கவனாதல், எங்ஙனம்? எம்மினும் அவற்குள்ள ஏற்றம் என்னை?" என்று பரிகாசமாய் கேட்டனன். அக்கேள்விக்குத் தக்க உத்தரவாக ஒட்டக்கூத்தர், "சோழராஜாக்கள் ஏறும் **கோரம்** என்று பெயர்பெற்ற பஞ்சகல்யாணிக் குதிரைகள், பாண்டியர் ஏறும் **கனவட்டக்** குதிரைகளுக்குச் சமானமாகுமா? அகண்ட **காவிரி**யாற்றுக்கு **வையை**யாறு ஒப்பாகுமா? (சிவனைப்போலவே) சோழர்கள் அணியும் ஆத்திமாலைக்குப் பாண்டியர் அணியும் வேப்பமாலை சரியாகுமா? உலக இருளை ஒழிக்கும் சூரியனுக்கு, அதன்முன் ஒளி குன்றும் சந்திரன் சமமாகுமா? அதுபோல் சூரியகுலச் சோழனுக்குச் சந்திரகுலப் பாண்டியன் சரியாவானா? வீரர்க்கெல்லாம் முதன்மையான வீரன் எனப் பெயர்போனவன் சோழனோ, பாண்டியனோ? வெற்றிபெற்ற சோனுடைய புலிக்கொடிக்குப் பாண்டியனுடைய சிறு மீன்கொடி நிகராகுமா? உறையூருக்கு நிகராவது கொற்கைப் பதியோ? ஆதலால், 'சோறுடைத்து சோணாடு' என்று ஔவையால் புகழப் பெற்றுப் பலவளமலிந்த சோணாட்டுக்குப் பாண்டிநாடு ஒப்பாகுமா? ஒப்பாகாது" என்னுங் கருத்தமைத்து, அதனாற் சோழன் புகழ் வெளிப்படும்படி,

**ஒட்டக்கூத்தர் சோழனை உயர்த்திக் கவிபாடியது.**

"கோரத்துக் கொப்போ கனவட்ட மம்மானே
கூறுவதும் காவிரிக்கு வையையோ வம்மானே
ஆருக்கு வேம்புநிக ராகுமோ அம்மானே
ஆதித்த னுக்குநிகர் அம்புலியோ அம்மானே

வீரர்க்குள் வீரனொரு மீனவனோ அம்மானே
வெற்றிப் புலிக்கொடிக்கு மீன்கொடியோ அம்மானே
ஊருக்கு றந்தைநிகர் கொற்கையோ அம்மானே
ஒக்குமோ சோணாட்டுக்குப் பாண்டிநா டம்மானே"

என்றொரு பாடலைச் சொன்னார்.

அது கேட்ட புகழேந்திப் புலவர், ஒட்டக் கூத்தரை நோக்கி, "முனிபுங்கவராகிய அகஸ்தியர் செந்தமிழை நிலவ வைத்தது பாண்டிநாட்டுப் பொதியமலையி லிருந்தோ, சோணாட்டு நேரிமலையிலிருந்தோ? உயர்வொப் பில்லாத அறுபத்து நான்கு திருவிளையாடல்களைச் சோமசுந்தரக் கடவுள் செய்தருளியது மதுரையிலோ, உறையூரிலேயோ? ஸ்ரீ வாசுதேவனாகிய விஷ்ணு மூர்த்தியின் அவதாரம் மீனோ, புலியோ? ஆதலால் பாண்டியன் மீனக் கொடியே சிறந்தது; புலிக்கொடிக்கு என்ன சிறப்பு? சிவபெருமானுடைய ஜடா மகுடத்தில் ஏறுவது சூரியனா? சந்திரன்தானே; ஆதலால் பாண்டியனுடைய சந்திரகுலம் மேம்பட்டதோ, சோழனுடைய சூரியகுலம் மேம்பட்டதோ? திருஞான சம்பந்தரிட்ட ஏடு எதிர் ஏறிச்சென்றது, காவிரியிலா? வையையாற்றில் தானே; ஆதலால் வையைதானே சிறந்தது? பேய்க்குப் பகையாய்த் தோன்றி அதனை விலக்குவது சோழனது ஆத்திமாலையா? பாண்டியன் அணியும் வேப்பமாலை தானே; மதுரையை அழிக்கப் பொங்கிவந்த சமுத்திரம் அஞ்சிவந்து வணங்கினது சோழன் காலையா? பாண்டியன் காலையா? பாண்டியன் காலைத்தானே?" என்னுங் கருத்தை அடக்கிப் பாண்டியன் பெருமை விளங்க,

புகழேந்திப்புலவர் பாண்டியனைப் பெருமைப்படுத்திப்பாடியது

"ஒருமுனிவன் நேரியிலோ வுரைதெளித்த தம்மானே
ஒப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ வம்மானே
திருநெடுமா லவதாரம் சிறுபுலியோ வம்மானே
சிவன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ வம்மானே
கரையெதிரல் காவிரியோ வையையோ வம்மானே
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ வம்மானே
பரவை பணிந்ததுஞ் சோழன் பதந்தனிலோ வம்மானே
பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே அம்மானே"

என்றொரு செய்யுளைப் பாடி, கூத்தர் கூற்றைக் கண்டித்தனர்.

அப்பொழுதே கூத்தர்க்கு நம் புலவர்மேல் பொறுமை உண்டாயிற்று. பிறகு கூத்தர், பலவித ஞாயங்களைப் பேசி, பாண்டியன் மகளைச் சோழற்கு மணமுடிக்க நிச்சயதாம்பூலம் செய்து சென்று, தமது மாணாக்கனாகிய சோழனுக்குச் செய்தி யறிவித்தனர். அதுகேட்ட குலோத்துங்கன், தனக்குப் பிரதிநிதியாக ஒட்டக்கூத்தரை ஏற்படுத்தி, மணவினை முடித்துக்கொள்ள மதுரைக்குச் சென்றான். சென்றவன், சொக்கலிங்கக் கடவுளைவணங்கிப் பாண்டியன்மகளை வதுவைசெய்து சின்னாள் மதுரையில் தங்கியிருந்தனன். பாண்டியன் தனது மகளுக்குத் தந்த சீதனப்பொருளைச் சோழன் தான் மதுரையிற்றங்கி யிருந்தபோதே, தனது ஊர்க்கு அனுப்பிவிட்டான். அந்தப் பொருள்களில் நமது புகழேந்தியாரும் ஒருவர்.

**புகழேந்திப்புலவர் பாண்டியன் மகளுக்குச் சீதனப் பொருளானது.**

அப்பொருள்களை வரவேற்ற ஒட்டக்கூத்தர், புகழேந்தியாரைக் கண்டவுடனே பழம்பொறாமையினால் சிறையிலடைத்து வைத்தனர். அங்ஙனம் காவலில் இருந்த புகழேந்தியார், தமது விதிவசத்தை நொந்துகொண்டு அக்காவற் கிடங்கின் அருகே தண்ணீர்க்குச் செல்லும் தையலார் செவிக்கினிமையாக இந்த ஏணியேற்றம், அல்லியரசாணிமாலை, பவளக்கோடிமாலை, புலந்தரன்களவுமாலை, பஞ்சபாண்டவர்வனவாசம் முதலிய நூல்களை, எளிதிற் பொருள் விளங்குமாறு பாடி அவர்களை மகிழ்வித்தார். அதற்கு மாறாக அவர்கள் அவர்க்கு அரிசி பருப்பு முதலியவற்றைச் சாளர வழியாகக் கொடுத்து வந்தார்கள். அவைகளை வாங்கிச் சமைத்துண்ட புலவர், அவைகளில் மிகுந்தவைகளைச் சிறைக் காவலர்க்குக் கையுறையாகக் கொடுத்து அவர்களைத் தம் வசப்படுத்திக் காலங் கழிப்பாராயினர். ஒட்டக்கூத்தர் நம் புலவர் உண்டு உயிர் வாழ்ந்திருக்கும்படி அவர்க்குக் கொடுத்து வந்தது ஆழாக்கரிசியும் உழக்குப்புமேயாம்.

**புகழேந்திப்புலவர் சிறைப்பட்டதும் நங்கைப்பாட்டுக்கள் பாடியதும்.**

சோழன் புகழேந்தியாரை ஒட்டக்கூத்தருக்குக் காட்டல், புலவர்கள் இருவரும் ஒருவரைஒருவர் இகழ்ந்து பாடுதல்.

மதுரையைவிட்டுத் தனது மனைவியோடு தன்னூரையடைந்து வாழ்ந்திருந்த சோழன் ஒருநாள், தனது பட்டத்தரச யானைமேலேறிப் பவனி வந்தனன். அப்போது பலரும் வேடிக்கை பார்த்ததுபோல, நமது புகழேந்தியாரும் தமது சிறைச்சாலையின் உயர் தளத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்தனர். அவரைச் சோழன், தனது ஆசிரியராகிய ஒட்டக்கூத்தருக்குக் காட்டி, "இவர், செந்தமிழ்க் கவிவாணர் அல்லரோ?" எனக் கேட்டனன். அதற்குக் கூத்தர் புகழேந்தியார் தம்மினுந் தாழ்ந்தவர் என்பது தோன்ற அவரை இகழ்ந்து, தம்மைத்தாமே புகழ்ந்து வேங்கைப்புலிக்கு முன் மான் நிற்குமா? எரிகின்ற நெருப்புக்கு முன் உலர்ந்த காடு நிற்குமா? கடற் சுறுவுக்கு முன் மற்ற சிறுமீன் நிற்குமா? சூரியனுக்கு முன் பனி நிற்குமா? (அதுபோல) கல்வியில் எனக்குமுன் இவன் நிற்கமாட்டுவானு?" என்னுங் கருத்துத்தோன்ற அவரை இகழ்ந்து,

"மானிற்கு மோவந்த வாளரி வேங்கைமுன் வற்றிச்செத்த
கானிற்கு மோவவ் வெரியுந் தழன்முன் கனைகடலின்
மீனிற்கு மோவந்த வெங்கட் சுறவமுன் வீசுபனி
தானிற்கு மோவக் கதிரோ னுதயத்திற் றூர்மன்னனே"

என்றொரு பாடலைப்பாடினுர். அதுகேட்ட புகழேந்தியார், 'இவன் இவ்வளவு வல்லவனு?' என்று சிரித்து, இராஜாவைப் பார்த்து, 'இந்தப் பாடலை வெட்டிப் பாடவோ? அல்லது ஒட்டிப் பாடவோ?' என்று கேட்க, அவன் "வெட்டிப் பாடவேண்டாம்; ஒட்டியே பாடும்" என்ன, அவர், "அந்த மான் முதலியவைகள் அவனே, புலி முதலானவைகள் நானே" எனப் பொருள்தோன்றும்படி,

"மானவ னனந்த வாளரி வேங்கையும் வற்றிச்செத்த
கானவ னனவ் வெரியுந்தழலுங் கனைகடலின்
மீனவ னனந்த வெங்கட் சுறவமும் வீசுபனி
தானவ னனக் கதிரோ னுதயமுந் தார்மன்னனே"

என்று அப்பாடலையே ஒட்டிப் பாடினுர். அதுகேட்ட சோழன் அவரிடத்தில் மதிப்பும் கருணையும் பெருக்கினன். ஆயினும் தனக்கு

ஒட்டக்கூத்தரிடத்திருந்த அபிமானங்காரணமாக நமது புலவரைச் சிறைநீக்கினுன் இல்லை.

**புகழேந்தியார், குயவன், கம்மாளன், கொல்லன் முதலியவர்களால், கூத்தர் கர்வத்தை அடக்கியது.**

ஒட்டக்கூத்தர், இவ்வாறு இருக்கையில், சோழ சமஸ்தானத்தில் பரிசுபெற வரும் வித்வான்களைக் காவலில் வைப்பதும், நவராத்திரி உற்சவத்தில் அவர்களை அழைப்பித்து, தாம் கேட்ட கேள்விக்கு அவர்கள் உத்தரம் சொல்லக்கூடாமல் மயங்கவைத்து துன்பப்படுத்துவதும் வழக்கமாய் இருந்தது. அவ்வழக்கப்படியே சில புலவர்கள் புகழேந்தியாருடன் சிறையிலிருந்தார்கள். அவர்களில் குயவன், கம்மாளன், வண்ணுன், அம்பட்டன், வேளாளன் ஆகிய ஐவருக்கும் புகழேந்திப் புலவர் விசேஷமாய்க் கல்வி போதித்துச் சமர்த்தர்களாக்கினுர். நவராத்திரியும் நெருங்கியது. அப்போது வழக்கம்போல ஒட்டக்கூத்தப்புலவர், சிறைச்சாலையில் அடைபட்டிருந்த வித்துவான்களை, வரவழைத்தார். அவர்களில் அநேகர், கல்வியில் அற்பமானவர்களா யிருந்தமையால், புகழேந்தியார் தம்மிடத்திற் கல்வி பயின்று தேர்ந்த குயவன் முதலான ஐவரையும் ஒருவன் பின் ஒருவனுய், ஒட்டக்கூத்தர் முன் சென்று நின்று, அவர்கேள்விக்கு உத்தரம் சொல்லத் திட்டஞ் செய்தனுப்பினுர். அப்படியே, முதலில் குயவன் சென்று மிடுக்காய் நின்றுன். அவனை நோக்கி, அவனுடைய கல்வித்திறம் தெரிந்து கொள்ளும்படி,

"மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
ஆனை முன்வந் ததெிர்த்தவ னாடா"

என்று கூத்தர் கூறினர். அதற்குக் குயவன்,—

"கூனை யுங்குட மும்குண்டு சட்டியும்
பானை யும்பண்ணு மங்குசப் பையல்யான்"

என்றுன். ஒட்டக் கூத்தப் புலவர், தன்னை யானையென்று சொன்னதற்கு அதனை அடக்குவது அங்குசம் ஆகையால், அங்குசப்பையல் எனவும், தான் குசவன் ஆகையால், அம் + குசப் பையல் எனவும்

குயவன் சிலேடையாய்ச் சொன்னான். பிறகு, அம்பட்டன் வந்து நின்றான். அவனைக்கண்டு,

"விண்பட்ட கொக்குவல் லூறுகண் டென்ன விலவிலக்க
புண்பட்ட நெஞ்சொடு மிங்குநின்றாய் பொட்டை யாய்புகல்வாய்"

என, அதற்கு அம்பட்டன்,—

"கண்பொட்டை ஆயினும் அம்பட்டன் நான்கவிவாணர் முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திடுக்கிடப் பாடுவனே"

என்றான். பிறகு வந்த கருமானை, ஒட்டக்கூத்தர், "நீயார்" என்று வினவ, அதற்கவன்,—

"செல்வன் புதல்வன் திருவேங் கடவன் ஜெகத்குருவாம்
கொல்லன் கவியைக் குறைசொன்ன பேரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர்முன்னே
அல்லும் பகலும் அடிப்பேன் கவியிருப் பாணிகொண்டே"

என்று சொன்னான். அதன்பின்புவந்த வேளாளனைக் கூத்தர் நோக்கி, "பிரபல கவிஞர்க்கு முன்னே புன்கவிஞன்வந்து நிற்கத் தகுமா?" என்றார். அதற்கு வேளாளன்,—

[1] "கோக்கண்டு மன்னர் குரைகடல் புக்கிலர் கோகனகப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூதலமேழ்
காக்கின்ற மன்னன் கவியொட்டக் கூத்தநின் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்க ளோதமிழ் பாடிய பாவலரே"

என்றான். இவர்கள் புலமைத்திறத்தைக் கண்ட கூத்தர், புகழேந்தியால் நேர்ந்தது இதுவென வுணர்ந்து, தமது கர்வமடங்கினர். சிறையிலிருந்தவர்களுள் புகழேந்திப்புலவர் தவிர, மற்ற யாவரும் பரிசு பெற்றுத் தத்தம் நாடு சேர்ந்தார்கள்.

---

[1] இதன்பொருள் :—மன்னர் - அரசர்கள், கோ கண்டு - சக்கரவர்த்தியைக்கண்டு, குரைகடல்புக்கிலர் - ஒலிக்கின்றகடலில் வீழ்ந்து இறந்திலர், கொட்டியும் - கொட்டிப்பூண்டும், கோகனகப்பூ கண்டு - தாமரை மலரைப் பார்த்து, பூவாது ஒழிந்தில - மலராதொழிந்தனவில்லை, பூதலமேழ் - ஏழு தீவுகளையும், காக்கின்ற மன்னன் - காக்கின்ற சோழமகாராஜனது, கவி - சமஸ்தானவித்வானாகிய, ஒட்டக்கூத்த - ஒட்டக்கூத்தரே, தமிழ்பாடிய பாவலர் - தமிழ்க்கவிபாடுகின்ற புலவர்கள், நின்கட்டுரைஆம் பாகண்டு - உன்சொல் வன்மை பொருள்நுண்மைகளமைந்த கவிகளைக்கண்டு, ஒளிப்பர்களோ - ஒளித்துக் கொள்வார்களோ, என்றவாறு.

இச்செய்திகளைச் சில தாதியரால் உணர்ந்த சோழன் மனைவி, தனது கணவன், பள்ளியறைக்கு வரும் போது, கதவைத் தாழ்பூட்டிக்கொண்டாள். அது கண்டசோழன், எத்தனையோ இதம்பேசியும், தனதுமனைவி, கதவைத் திறவாதபடியால், அவளுடைய ஊடலைத் தணிப்பிக்கும்படி ஒட்டக் கூத்தரை அனுப்பினன். அவர் போய்,—

**சோழன் மனைவி ஊடல் கொள்ள, அதனல் புகழேந்தியார் சிறையினின்று விடுதலையடைதல்.**

[1]"நானே யினியுன்னை வேண்டுவ தில்லை நளினமலர்த்
தேனே கவாடந் திறந்திடு வாய்திற வாவிடிலோ
வானே றனைய ரவிகுல மன்னனின் வாசல்வந்தால்
தானே திறக்குநின் கைத்தலமாகிய தாமரையே"

என்றார். அப்பாடல் கர்ணகடூரமா யிருந்தபடியால், "ஒட்டக் கூத்தர் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்" என்று சொல்லி, அவள் மற்றொரு தாழ்ப்பாளையும் போட்டாள். இதைக் கேட்ட சோழன், புகழேந்திப் புலவரை நெடுநாளாய்ச் சிறையினின்று விடுவிக்காதிருந்த கோபத்தினல், தன்மனைவிக்கு ஊடல் உண்டாயிற்று என்று ஊகித்து, அவரைச் சிறைநீக்கி, தனது மனைவியின் கோபத்தைத் தணிக்கும்படி அனுப்பினன். அவரும் அப்படியே சென்று, அவளுக்கு ஊடல் தணியும்படி,—

[2]"இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை யேந்தியபொற்
குழையொன் றிரண்டு விழியணங் கேகொண்ட கோபந்தணி
மழையொன் றிரண்டுகைம் மானுபரணனின் வாயில்வந்தால்
பிழையொன் றிரண்டு பொறாரோ குடியிற் பிறந்தவரே"

---

[1] இதன்பொருள் :—நளின மலர் தேனே—தாமரை மலரில் வாழ்கின்ற தேன்போலும் இன் சுவையைத் தருகிற மொழியை யுடைய இலக்ஷ்மியைப் போன்றவளே, கவாடம் திறந்திடுவாய்—கதவைத் திறப்பாயாக, திறவாவிடில்—திறவாவிட்டால், வான் ஏறு அனைய (பகைவராகிய பாம்புகளுக்கு) மேகத்திலிடிக்கின்ற ஆணிடி போன்றவனாகிய, இரவிகுலாதிபன்—சூரிய குலத் தரசனாகிய சோழன், வாயில் வந்தால்— (உன்) வாசலில் வந்தால், நின்— உனது, கை இதழ் ஆகிய தாமரை —(விரல்களாகிய) இதழ்களை யுடைய கைத்தாமரையானது, தானே திறக்கும்—தானே திறந்து விடப் போகின்றது, நான் இனி உன்னைவேண்டுவதில்லை— (ஆதலால் அந்த விஷயத்தைப் பற்றி) நான் இனி உன்னைப் பிரார்த்திப்ப தில்லை, என்றவாறு.

[2] இதன்பொருள் :—இரண்டு வகிர்செய்த இழை ஒன்று - இருபிளவாகச் செய்யப்பட்ட நூலிழையின் ஒரு சிறு கூறுபோன்ற, நுண் இடை -

என்றார். இப்பாடலைக் கேட்டவுடனே மகிழ்ச்சியடைந்து, இராணி கோபந்தணிந்தாள். அதுமுதல் சோழராஜன் புகழேந்திப்புலவரைப் பரிபாலித்து வந்தான். ஆயினும், ஒட்டக்கூத்தருடைய பொறாமையினாலும், அவர் பேச்சை அரசன் கேட்டுவந்ததனாலும், புகழேந்திப் புலவர்க்கு அங்கிருக்க இஷ்டம் இல்லாமல், அந்நாட்டிற்சேர்ந்த மள்ளூவம் என்னும் ஒரு சிற்றூரை, முரணைநகரிலிருந்து அரசாண்ட சந்திரன் சுவர்க்கியென்னும் அரசனிடம்சேர்ந்து, அவன் விரும்பினபடி **நளவெண்பா** என்னும் நூலைச்செய்து பரிசுபெற்று வாழ்ந்திருந்தார்.

**நளவெண்பாப்பாடி அரங்கேற்றியது.**

பின்பு, குலோத்துங்கன், அதிக மரியாதையுடன், அவரை வரவழைத்து, உபசரித்து, நளவெண்பாவை அரங்கேற்றச்செய்தான். அதனை அவர், கம்பர், ஒட்டக்கூத்தர் முதலிய புலவர்கள் முன்னிலையில் பிரசங்கஞ் செய்துகொண்டு வருகையில்,—

**"மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது"**

என்னும் பாடலைச் சொல்லும்போது, கூத்தர், "மல்லிகை அரும்பைச் சங்காகவும் வண்டைச் சங்கூதுபவன் ஆகவும், நீர் கூறியது அருமையாகத்தான் இருக்கின்றது; சங்கூதுவோன் அதன் அடிப்புறத்தை வாயில் வைத்தூதுவது மரபே ஒழிய, மேற்புறத்தை அல்லவே; வண்டுகள் மல்லிகையின் மேற்புறத்தேதானே ஊதுகின்றன; ஆகையால் இந்தப் பாட்டில் உள்ள வர்ணனை தவறு" என்றார்.

---

**நுட்பமாகிய இடையையும், ஏந்து வள்ளை குழை ஒன்று இரண்டு விழி** - காதில்அணிந்த குழைகளை **சென்று** தீண்டுகிற இரு கண்களையும் உடைய, **அணங்கே** - தெய்வப்பெண்போல்பவளே, **கொண்ட கோபம் தணி** - நீ கொண்ட கோபத்தை நீயே தணித்துக்கொள்ளவேண்டும், **மழை ஒன்று** - (கைம்மாறு கருதாக்கொடையாகிய) மேகத்தின் குணமமைந்த, **இரண்டுகை** - இரண்டு கைகளையும், **மானம் ஆபரணன்**-மானமாகிய ஆபரணத்தையும் உடையவனாகிய சோழமகாராஜன், **நின்வாயில் வந்தால்** - உன் வாசலில் வந்தால், **குடியில் பிறந்தவர்** - உயர்குடியிற்பிறந்த மாதர்கள், **ஒன்று இரண்டு பிழை பொறுரோ** - ஒருபிழை இருபிழைகளைப் பொறுக்கமாட்டார்களா, என்றவாறு.

அதற்குப் புகழேந்தியார், "*கட்குடியனுக்கு அடிப்புற மென்றும் மேற்புற மென்றும் வித்தியாசம் தெரியுமா?" என்றார். இப்படிக் கூத்தர் செய்துவந்த வீண் வம்பளப்புகளுக்கெல்லாம், புகழேந்தியார் சாதுரியமாகவும், மாதுரியமாகவும், மாதுரிதமாகவும் உத்தரம் சொல்லி அவர் நாவை அடக்கிவந்தார். கம்பர் புகழேந்தியார் சார்பாகவே அவரைப் புகழ்ந்து வந்தார். புகழ் ஏந்தியைப் புகழாதார் யாவர்?

**ஒட்டக்கூத்தரும் புகழேந்தியும் நட்புற்றது, இருவரும் சந்தம் பாடியது.**

ஒட்டக்கூத்தர், வெளிக்கு அவமதித்திருந்தாரேனும், புகழேந்தியின் கவிக் கல்வித் திறத்தை உள்ளுக்குள்ளே உவந்திருந்தனர். ஒருநாள் கூத்தர் தமது மனைவியிடத்தில் நளவெண்பாவைப் புகழ்ந்து பேசிக்கொண்டிருந்தனர். அப்போது அவரைக் கொல்ல அங்கே ஒளித்திருந்த புகழேந்தியார், அதனைக் கேட்டு, அவரிடத்திருந்த பகைமையை விட்டு, நட்புப்பாராட்டிக் களித்துக் கலந்திருந்தனர். சோழன் இதனை உணர்ந்து, உவந்து, அவ்விருவரையும் நோக்கி, அந்நாட்டிலுள்ள நெய்த்தானத் தீச்சுரர்மேல் "நெய்த்தானத் தானைச் சேவித்தே" என்பது †மகுடமாக ‡வல்லோசைச் சந்தவிருத்தம் பாடும்படி சொல்ல, கூத்தர்,—

**§ "விக்கா வுக்கா வித்தா விப்போய்**
**விட்டால் நட்டார் சுட்டேர் புக்கார்**
**இக்கா யத்தா சைப்பா டுற்றே**
**யிற்றே டிப்போய் வைப்பீர் நிற்பீர்**
**அக்கா டப்பேய் தொக்கா டச்சு**
**ழப்பா டத்தீ வெப்பா டப்பூ**
**ணெக்கா டக்கா னத்தா டப்போ**
**நெய்த்தா னத்தா னைச்சே வித்தே"**

என்கிற பாட்டையும், புகழேந்தியார்,—

---

* கட்குடியன் = கள் + குடியன்; கள் = தேன், மது.

† மகுடம் = ஈற்றடிமுடிபு.

‡ வல்லொற்று ஒவ்வொரு பதத்திலும் இரண்டாமெழுத்தாய் அழுந்த உச்சரிப்பது.

§ இதன்பொருள்:—விக்கா - விக்கல்கண்டு, உக்கு - அஞ்சிநடுங்கி, ஆவி தாவி போய்விட்டால் - (உடலை விட்டு) உயிரானது அப்புறப்பட்டுப் போய் விட்டால், நட்டார் - (முன்பிரியாமல் பரிவுற்றிருந்த) தாய்தந்தை முதலிய

* "தற்கோ லிப்பூ சற்பா சத்தே
தப்பா மற்சா கைக்கே நிற்பீர்
முற்கோ லிக்கோ லிப்பூ சித்தே
முட்டா மற்சே வித்தே நிற்பீர்
வற்று நெட்டோ டைப்பா ரைச்சேன்
மைப்பூ கத்தேறித்தா விப்போய்
நெற்று ளுற்று லேப்பா கிற்சேர்
நெய்த்தா னத்தா னேச்சே வித்தே"

என்கிற செய்யுளையும் பாடினார்கள்.

மற்றொரு நாள் திருக்குறுங் குடியென்னுந் தலத்துப் பெருமாள் மேல், வல்லோசையுள்ள கலித்துறைகளைப் பாடும்படி அரசன் கேட்க, கூத்தர்,—

"திக்குளெட் டுக்[1]கயந் துக்கமுற் றுத்திடுக் கிட்டலற
[2] மைக்கடற் குட்சரந் தைக்கவிட் டோற்கிட மாமதுர
[3] விக்குமுற் றிக்கணுச் சற்றுவிட் டுத்தெறித் திட்டமுத்தைக்
கொக்கு [4] மொக் கிக்கக்கி விக்குமச் சோலைக் குறுங்குடியே"

என்றொருபாட்டும், புகழேந்தியார்,—

---

சுற்றத்தார், சுட்டு ஊர்புக்கார் - உடம்பைச்சுட்டு ஊரில் புகுந்து வாழ்வார், இ காயத்து ஆசைப்பாடு உற்று - இத்தன்மையாகிய (இழிதன்மையுடைய) தேகத்தினிடத்து ஆசைகொண்டு, இல்தேடி போய்வைப்பீர் - (அதனைப் போஷிக்க நித்தம் பொருளைத்தேடி வந்து அறஞ்செய்யாமல்,) வீட்டில் புதைத்து வைக்கின்றவர்களே, அக்கு ஆட - எலும்புமாலை அசைந்தாடவும், பேய் தொக்கு ஆட - பேய்கள் கூடியாடவும், சூழ் அப்பு ஆட - சடாமகுடத்திலிருக்கும் கங்கை ஆடவும், தீ வெப்பு ஆட - வலதுகையிலிருக்கும் மழுவானது சுவாலித்து ஆடவும், பூண் நெக்கு ஆட - காதிலணிந்த சர்ப்பக்குழைகள் நெகிழ்ந்து ஆடவும், கானத்து ஆட போம் - மயானத்தில் ஆடுகின்ற, நெய்த்தானத்தானை - நெய்த்தானம் என்னும் க்ஷேத்திரத்தில் எழுந்தருளிய பரமசிவனை, சேவித்து - வணங்கி, நிற்பீர்-நிற்கக்கடவீர் என்றவாறு.

* இதன்பொருள்:—தன்கோலி - இருவினைகள் தன்னை வளைந்துகொள்ள, பூசல்பாசத்தே - பாசத்திரயமாகிய போராட்டத்தில் அகப்பட்டு, தப்பாமல் சாகைக்கே நிற்பீர் - தப்பாமலே சாகும்படி நிற்பவர்களே, முன் கோலிகோலி - முந்திவிரைந்து, முட்டாமல் பூசித்து - மந்திரதந்திர வழுவு வராமல் பூசைசெய்து, சேவித்து - வணங்கி, வற்று நெடு ஓடை - வற்றாத நெடிய நீரோடைகளிலுள்ள, பாரைச்சேல் - பாரைமீன்கள், மை பூகத்து - மேகமண்டலத்தை அளாவியிருக்கிற கமுகமரத்தில், தாவிஏறிப்போய் - தாவிஏறிச்சென்று (பாக்குக்குலைகளை உதிர்த்து, அங்கிருந்துதிரும்பி), நெல் தாள் உற்று - நெல்லின் அடியில்விழுந்து (அந்நெற்கதிர்களைச் சிதறி), ஆலை பாகில் சேர் - ஆலையாடிக் காய்ச்சப்படும் கரும்பின் பாகில் பாய்கின்ற (வளப்பமிகுந்த), நெய்த்தானை தியானித்து - நெய்த்தானத்தி லெழுந்தருளிய எம்பெருமானைத் தியானித்து, நிற்பீர் - நிற்கக் கடவீர்கள், என்றவாறு.

[1] கயம் - யானை; [2] மைக்கடல் - கருங்கடல்; [3] இக்கு - கரும்பு; [4] மொக்கி - விழுங்கி.

"எட்டெழுத் தைக்கருத்[1]திற்குறித் திட்டுகித் தம்பரவும்
சிட்டர்கட் குத்திருப் பொற்பதத் தைச்சிறக் கத்தருமவ்
[1]வட்டநெட் டைப்பணி மெத்தையத் தற்கிடம் [2]வாரிசப்பொ
குட்டினத் துக்குலந் தத்திமுத் தீனுங் குறுங்குடியே."

என்றொரு செய்யுளும் பாடினார்கள்.

அரசனும் முன்போலில்லாமல் இருவரையும் ஒருசமமாகப் பரிபாலித்துவந்தான். இவ்வாறு புகழேந்தியார் சோணாட்டிற் காலங் கழித்துவந்தார்.

(ஆசிரியவிருத்தம்.)

"வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோர் ஜெயங்கொண்டான் விருத்தமென்
ஒண்பாவிற் குயர்கம்பன் கோவையுலா அந்தாதிக் கொட்டக்கூத்தன் [னும்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள் வசைபாடக் காளமேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காச லாதொருவர் பகரொணாதே.

## ஏணியேற்றத்தின் வரலாறு.

கங்கைக்கரையில் இப்போது டில்லி என்று வழங்கும் அஸ்தினபுரியை இராஜதானியாக்கி அரசாண்ட சந்திரகுலத்தரசர்களில் திருதராஷ்டிரன், பாண்டு என்று இருவர் சகோதரர் இருந்தார்கள். இவர்களில் முன்னவன் குருடன். ஆகையால், பின்னவன் அரசாண்டு வந்தான். முன்னவனாகிய திருதராஷ்டிரனுக்குத் துரியோதனன் துச்சாதனன் முதலிய நூறுமக்களும், பின்னவனாகிய பாண்டுவுக்கு ஐந்து மக்களும் பிறந்தார்கள். குருவமிசத்திற் பிறந்தவர்களாகையால், அந்நூற்றுவருக்குக் கௌரவர் என்றும், பாண்டுவின் மைந்தர் ஆகையால், இவர்களுக்குப் பாண்டவர் என்றும் பெயர் வழங்குகின்றது. அவர்களில் மூத்தவர், தருமராஜர்; அவர்க்கிளையவன் பீமன்; அவர்க்கிளையவன் அர்ச்சுனன்; அவர்க்கிளையவன் நகுலன்; அவர்க்கிளையவன் சகாதேவன். திரௌபதியே, பாண்டவர் ஐவருக்கும் பொதுவான மனைவி. இவள், பாஞ்சால நாட்டரசனுக்கு நெருப்பில் (யாகத்தில்)

[1]வட்ட நெட்டை பணி - வட்டமிட்டுள்ள நீண்ட (ஆதிசேஷனாகிய) பாம்பு; [2]வாரிசப்பொகுட்டில் நத்துக்குலம் தத்தி - தாமரைப்பொகுட்டில் சங்குக் கூட்டங்கள் தாவி.



இந்திரப் பிரஸ்தத்தில் பஞ்ச பாண்டவர்.

பிறந்தமகள் ; "இவளுடன் பிறந்த வில்லைவளைத்த அரசிளங்குமரன் இவளைப் பெறுவது" என்றிருந்தபடி, பாண்டவரில் நடுவன் ஆகிய அர்ச்சுனன், இவளை மனைவியாகப் பெற்றனன். ஆயினும் பாண்டவர் ஐவர்க்குந் தாயாகிய குந்தியின் கட்டளையால், அவர்களைவரும் இவளை மனைவியாக ஏற்றுக்கொண்டார்கள்.

அஸ்தினபுரத்தில் அரசாண்டுவந்த பாண்டு மகாராஜன், அகால மரணம் அடைந்ததனால், துரியோதனன் சிம்மாசனம் ஏறினான். நியாயமாய், ஐவரில் மூத்தவராகிய தருமராஜரே, சிம்மாசனம் ஏற வேண்டும். இவர் துரியோதனனைவிட மூத்தவர் ; நற்குணம் நிறைந்தவர். ஆயினும், அரண்மனைப் பெரியாரனைவரும், துரியோதனன், முன்னவன் மகன் ஆகையால், அவன் செய்த அக்கிரமத்தைப் பொறுத்துக்கொண்டனர். தருமராஜர் முதலியோரும். "பாராண்டால் என்ன?" எனச் சும்மா இருந்து விட்டார்கள்.

பாண்டவர் விஷயத்தில், துரியோதனன் மிகவும் பொல்லாதவன்; பொறாமைக் குணம் உடையவன் ; பிறந்த நாள் தொடங்கி ஐவரையும் அகத்தில் வெறுத்தவன் ;

> உடைப்பொருஞ் செல்வத் துயர்ந்த பெருமை
> அடக்கமில் உள்ளத்த னாகி - நடக்கையில்
> ஒள்ளிய னல்லான்மேல் வைத்தல் குரங்கின்கைக்
> கொள்ளி கொடுத்து விடல்.

என்கிறபடி, சிம்மாசனம் ஏறினவுடனே, ஐவரையும் கொல்ல வேண்டும் என்று அனேக சூழ்ச்சிகள் செய்தான். துரியோதனனுக்குச் சகுனி யென்னும் நல்லம்மான் ஒருவன் உண்டு. அவனுடைய உதவியால் துரியோதனன், பஞ்சவரைக் கொல்லும்படி பண்ணின சதி யாலோசனைகளுக்கு அளவில்லை.

அரக்கு மாளிகைகட்டி, அதனினைவரையும் குடியேற்றி நெருப்பிட்டுக்கொளுத்தினன் துரியோதனன். விதுரன் என்னும் சிற்றப்பன் உதவியால், ஐவரும் அதினின்று தப்பிப் பிழைத்தார்கள். திருதராஷ்டிரனும் ஐவரை அகத்தில் வெறுத்தவனாயினும், அவர்களை விரும்பினன்போல மேலுக்கு நடித்து, இந்திரப்பிரஸ்த நகரத்திலி

ருந்து அதனைச் சூழ்ந்தநாட்டை அவர்கள் ஆளுமாறு ஏற்படுத்தி யிருந்தான். அவன் நல்லெண்ணத்தோடு அங்ஙனஞ் செய்யவில்லை. ஆயினும் இவருடைய பொறுமைக்குணமே அவர்களுக்குத் துணை யாய், அவர்கள் ஆண்டநாடு, நகரங்கள், அஸ்தினபுரத்தை விட அனேக விதங்களிற் சிறந்திருந்தன. இதனால், துரியோதனன் பொறு மை பெருகித் தனது தந்தையை வெறுத்து அம்மானாகிய சகுனியோடு ஆலோசனைசெய்து, இவரையும் விருந்துக்கழைத்தான். அப்போது அவன் செய்த கொடுமைகளைப் பின்வரும் நங்கைப்பாட்டுக்களிலொன் றாகிய பஞ்சபாண்டவர் வனவாசம், என்னும் நூலின் உரையால் உணர்க.

தருமா புரமென்னும் தாரணியை ஆண்டிருந்தோம்
பங்குப் பகையாளி பண்டைநாள் தாயாதி
ஜென்மப் பகையாளி சேனைநாள் தாயாதி
பெரியப்பன் பிள்ளையெங்கும் பேர்போன திரியோதிரன்
இவரையுங் கொல்வதற்கே ஆலோ சனைகள்செய்து
விருந்துண்ண வாருமென்று விருந்தோலை அனுப்பிவைத்தான்
மெய்யான ஓலையென்று விரைவாகச் சென்றமையா
வருகின்ற வழிதனிலே வைத்தானே தண்ணீர்ப்பந்தல்
வசநாபித் தண்ணீர்ப்பந்தல் வைத்தானே படுபாவி
கொல்ல நினைத்தானே குடிகேடன் எம்மையெல்லாம்
தப்பிப் பிழைத்தோமே சாமியின் புண்ணியத்தால்
பின்னும்யோ சனையொன்று செய்தான் பெரும்பாவி
வருகிற வழிதனிலே வசிகளை நட்டுவைத்தான்
உருக்கூசி செப்பூசி ஒருநூறு நட்டுவைத்தான்
எழுகூசி கல்லூசி இருப்பூசி நட்டுவைத்தான்
நூறுமுள்ளுங் கத்திகளும் குறுக்கே நுழைத்துவைத்தான்
தப்பிப் பிழைத்தோமே சாமியின் புண்ணியத்தால்
பின்னும்யோ சனையொன்று செய்தான் பெரும்பாவி
பொய்க்குழி வெட்டிமேலே போட்டுவைத்தான் சிம்மாதனம்
ஆழக் குழியதனில் ஆட்களை நிறுத்திவைத்தான்

ஆயுதமுங் கையுமாக ஆட்களை நிறுத்தினனே
கொல்ல நினைத்தானே குருடன்மகன் சத்துராதி
தப்பிப் பிழைத்தோமே சாமியின் புண்ணியத்தால்
பின்னும்யோ சனையொன்று செய்தான் பெரும்பாவி
எண்ணெயிட்டுக் கொள்ளுமென்று எங்களுக்குச் சொல்லியவன்
எழுநூறு மல்லர்களை எங்களிடம் தானனுப்பி
எண்ணெ யிடும்பொழுதில் என்னுயிரை வாங்குமென்றான்
அதற்கும் பிழைத்தோமே ஆண்டவனார் புண்ணியத்தால்
பின்னும்யோ சனையொன்று செய்தான் பெரும்பாவி
அரைப்புக்கிண்ணங் கையிலிட்டு அபிஷேகம் ஆடுமென்றான்
நீரில் வசிநாட்டி வைத்தானே நிர்மூடன்
நீண்ட பலவசிகள் நிறுத்தினன் மலைபோலே
தப்பிப் பிழைத்தோமே சாமியின் புண்ணியத்தால்
பின்னும்யோ சனையொன்று செய்தான் பெரும்பாவி
உண்ணுகின்ற சோற்றினிலே ஊதாரி மருந்துவைத்தான்
குடிக்கிற தண்ணீரில் கொலைகாரன் நஞ்சையிட்டான்
தப்பிப் பிழைத்தோமே சாமியின் புண்ணியத்தால்
பின்னும்யோ சனையொன்று செய்தான் பெரும்பாவி
சோழி விளையாடி சொக்கட்டான் சூதாடி
நாடு பறித்தானே நகரமுங் கொள்ளைகொண்டான்
சீமைத் துரைத்தனமும் தேசமுங் கொள்ளை கொண்டான்.

இங்ஙனம் இவன், பலகொடுமைகளைச் செய்துவந்தான். ஆனாலும் இவர், “நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல - தன்றே மறப்பது நன்று” என்றபடி அவன்செய்த தீமைகளை அப்போதைக்கப்போதே மறந்துவிட்டு, அவனோடு உறவாடி மகிழ்ந்தார்கள். அவன் இட்ட விருந்துண்டு அவனோடு அளவளாவி அவனுடைய அரண்மனையில் தங்கியிருந்தார்கள். அப்போது, துரியோதனன், தனது அம்மானாகிய சகுனியின் துராலோசனையால், பாண்டவர் ஐவரில் மூத்தவராகிய தருமரைப் பொழுதுபோக்காகச் சொக்கட்டான் ஆட அழைத்தான்.

அறத்தை வேர்கல்லும் அருநரகிற் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும் - மறத்தையே
பூண்டு விரோதஞ் செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ * * * * தெரிந்து.

என்று நளச்சக்கர வர்த்தியின் மந்திரிமார் அவருக்குக் கூறியபடி சூதாகிய சொக்கட்டான் ஆட்டம், தருமத்தை அடியோடு அழிக்கும்; நரகத்தில் சேர்க்கும்; ஜயிப்பதையே பெரும்பற்றுகப்பற்றி, தயவைத் தலையெடுக்கவொட்டாமல் கெடுக்கும்; தீமையையே மேற்கொண்டதனுல் விரோதத்தை உண்டாக்கும்; ஆகையால், மேலோர்கள் அதனைத் தீண்டுவார்களா?'' என்றிருந்தும், தருமராஜருக்கு 'விதிவழி மதி' யென்றிருந்தபடியால் துரியோதனன் சூதாகத் தூண்டிவேண்டின சூதாட்டத்துக்கு உடன்பட்டார். உடனே பாய்ச்சிகை முதலிய கொண்டு வரப்பட்டன. இருவரும் உட்கார்ந்து சூதாடினுர்கள். சிறிதுபோது, துரியோதனன் தானே ஆடினுன்; ஆனுலும், சூதாட்டத்தில் வல்லவன் என்று பெயர் பெற்றிருந்தத் தனது நல்லம்மான், சகுனி என்பவனைத் தனக்காக உட்கார்ந்து ஆடும்படி வேண்டிக்கொண்டான். அவர்களுக்குள், அதற்கு முந்தியே, ஏற்பட்டிருந்தபடி, சகுனியும் அதற்குச் சம்மதித்தான்: தருமரும் சம்மதித்தார். இருவரும் சிறிதுபோது, ஆடின பிறகு, சகுனி, மாயச்சூதாடி தருமரை வெல்வானுயினுன். இங்ஙனம் பலமுறை வென்றதனுல், தருமருடைய நாடு, நகரம், அணி, ஆடை, இன்னுமுள்ள பொருள்கள் பலவற்றையும் ஜயித்துக்கொண்டான் பிறகு, தருமர் தமது சகோதரர்களையும் தம்மையும் வைத்தாடித் தோற்றுர்; தமது மனைவியாகிய திரௌபதியையும் தோற்றுவிட்டார். உடனே துரியோதனன், தனதுநெடுநாளைய வஞ்சினத்தை முடித்துக் கொள்ளவேண்டுமென்று தீர்மானித்துத் திரௌபதியைச் சபைக்கு அழைத்து வரும்படி துச்சாதனன் என்னும் தனது தம்பியை ஏவினுன். அவன், அந்தப்புரஞ்சென்று, அவனது தாயோடு உறவாகிக் கூடியிருந்த திரௌபதியைச் சபைக்கு வரும்படி அழைத்தான். அதனைமறுத்துரைத்த திரௌபதியை வெறுத்துரைத்து, துச்சாதனன்

அவளுடைய கூந்தலைப்பற்றி இழுத்துக் கொண்டுவந்து சபையில் விட்டு அண்ணனை வணங்கிநின்றான். அதுகண்ட துரியோதனன், அதிக மனமுவந்து, திரௌபதியைப் பேசாதும் பேசி, ஏசாதும் ஏசி, வேசியெனக் கூசாது வைது, அவளைத் தன் தொடையின் மீது வந்து உட்காரச்சொன்னான். அப்போது திரௌபதி கண்ணனை மனதில் தியானித்து,

> " கஞ்சனைக் காய்ந்தோய் கமல மலருறையும்
> மஞ்சனைப் பெற்றோய் மதகரிபை - அஞ்சற்க
> என்றளித்தோய் எல்லா வுலகுக்கும் நாதவனை
> அன்றியெனக் குற்றதுணை யார் "

" கண்ணா! மணிவண்ணா! காகுத்தா! மாதவா! அண்ணா! எனை யாண்டருள் " என்று துதித்தபடியே தன்னை மறந்து நின்றனள். அங்ஙனம் பக்தியிற் சிறந்து நின்ற பாவையை மானமழிக்கக் கருதி இரக்கத்தைத் துறந்து நின்ற ஈடழிவானாகிய துரியோதனன் அவளுடைய துகிலுரியத் துச்சாதனனுக்குக் கட்டளையிட்டான்.

அவன் அங்ஙனம் செய்புந்தோறும், ஆடை வளர்ந்து கொண்டே வந்தது. துச்சாதனன் கைசோர்ந்து மயங்கிநின்று விட்டான். அதனைக் கண்ட பிறகும் துரியோதனற்கு நல்லறிவு தோன்றவில்லை; " தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள் - பெய்யெனப் பெய்யு மழை " என்றபடி, திரௌபதியின் கற்பின் நிலைமையையும், " கடவு ளருளா லெது கைகூடா ததனைவிட வுயர்ந்ததில்லை பொருள்வேறு " என்றபடி, அவளுடைய தெய்வபக்தியின் சிறப்பையும் துன்மார்க்கத்திற் செல்வோராகிய துரியோதன துச்சாதனர்கள் உணராராயினர். அங்கிருந்த பீஷ்மர் முதலிய பெரியோர் பலரும் பலவிதத்திலும் புத்திகூறியும் துரியோதனன், பஞ்சபாண்டவருடைய நாடு நகரங்கள் முதலியவைகளைக் கொடுத்துவிடச் சம்மதிக்கவில்லை. ஆகையால், அங்கிருந்த பெரியோர்கள் துரியோதனன் தூண்டியபடியே பாண்டவர்கள் ஐவரும் தமது மனைவியாகிய திரௌபதியுடன் பன்னிரண்டு வருஷம் வனவாசஞ்செய்து, பிறகு ஒருவருஷம் அஞ்ஞாத வாசம் முடித்து வந்து, தமது நாடு நகரங்களைப் பெற்றுக்கொள்ளலா

மெனத் தீர்மானித்தார்கள். அதற்கு உடன்பட்ட ஐவரும் தமது மனைவியுடன் வனஞ்செல்வாராயினர்.

பஞ்சவர்களும் திரௌபதியும் வனஞ்சென்றபிறகு அருச்சுனன் தேவியர்களாகிய, சுபத்திரை, மின்னொளியாள், நாககன்னி, பவளக்கொடி, போகவதி, இவர்களனைவரும் துரியோதனனுக்கு அஞ்சி மதுரைக்குச்சென்று, அங்கே பெண்ணரசியாய் வீற்றிருந்த அல்லியிடம் அடைக்கலம் புகுந்தார்கள். அல்லியும் அவர்களை ஆதரித்து தன் அரண்மனையிலேயே வைத்திருந்தாள்.

இப்படியிருக்க மாபாவியாகிய துரியோதனன், சுபத்திரையை இச்சித்தான். அவளைத் தனக்கு ஆசை நாயகியாக அரண்மனையில் கொண்டுவந்து வைத்துக்கொள்ள எண்ணி, அவன் கர்ணனிடம் தன் கருத்தைத் தெரிவித்து அவனையும் தன்னுடன் மதுரைக்கு வரும்படி வேண்டினன். அப்பொழுது கர்ணன் அவன் எண்ணிய எண்ணம் பிசகென்றும், அயலான் மனைவியை இச்சிக்கலாகாதென்றும், அதனல் அநேக தீங்குகள் விளையுமென்றும் பலபுத்திமதிகளைச் சொன்னன். துரியோதனன் அவைகளைக் கேளாமல் தான்கொண்ட கருத்திலே பிடிவாதமுள்ளவனுக, கர்ணனை வெறுத்துரைத்தான். பிறகு அவன் மதுரைக்குப் போவதாகத் தீர்மானித்து, தன் மனைவியிடம் சென்று தனது கருத்தை வெளியிட்டான். அவளும் அவனுக்கு அநேக நியாயங்களைக் கூறி மதுரைக்குப்போக வேண்டாமென்று தடுத்தாள். துரியோதனன் அவள் கூறிய நீதிகளைப் பெண் புத்தியென்று இகழ்ந்து தள்ளிவிட்டு, தன் எண்ணத்தை முடித்துக் கொள்ளத் தீர்மானித்து, வேட்டைக்குப்போவதாக அபிநயித்து யானை, சேனை பரிவாரங்களுடன் மதுரை சென்றன்.

மதுரைக்கோட்டை வந்ததும், துரியோதனன் பேரிகை அடிக்கச்சொன்னன். பேரிகை சத்தங் கேட்ட அல்லி தனது மந்திரி பவளக்கொடியை அனுப்பி என்ன சமாச்சாரம் என்று அறிந்து வரச் சொன்னள். துரியோதனன், கர்ணன் வந்திருப்பதாகக் கூறி பேரிகை அடிக்கச் சொன்னன். அதைக்கேட்ட பவளவல்லி, அல்லியிடம்

சென்று கர்ணன் வந்திருப்பதாகத் தெரிவித்தாள். அல்லி உடனே அவனை அரண்மனைக்குள் வரும்படி பேரிகை அடிக்க உத்தரவுசெய்தாள். அவ்வாறே பேரிகை அடிக்கப்பட்டது. அச்சத்தங் கேட்டதும் துரியோதனன் உள்நுழைந்தான்.

கர்ணன் வருவதாகத் தெரிவிக்கப்பட்டதால் வாயில் காக்கும் தாதியர்கள் அவனை அல்லியின் உத்தரவுப்படி, வரவேற்கக் காத்திருந்தார்கள். அவ்வாறிருக்கக் கர்ணனுக்குப் பதிலாகத் துரியோதனன் வருவதை அவர்கள் அறிந்தார்கள். உடனே ஓடோடியும் சென்று அத்தாதியர்கள் அல்லியிடம் துரியோதனன் வருவதை அறிவித்தார்கள். இதை அறிந்த அல்லி மிகவும் கோபங்கொண்டு, பவளவல்லியைப் பார்த்து,

'மந்திரப் பவளவல்லி மாதரசே இப்போது
தந்திரமாகவே நீ சண்டாளன் தனைக்கண்டு
வணக்கங்கள் செய்யாமல் வாசற் படியினின்று
அவனை, உள்நுழைய ஒட்டாமல் ஒளிவீசும் கண்ணாளே
மூன்றும் படித்தளத்தில் மொய்குழலே போயிருந்து
வந்த வயணமதை வகையாகக் கேட்டறிந்து
திரும்பிவந்து நீயெனக்குச் செப்புவாய் தேன்மொழியே'

என்று உத்தரவு செய்தாள்.

பவளவல்லி அங்ஙனமே சென்று அவனை மூன்றும் படித்தளத்திலேயே வழிமறித்து "ஐயா, நீர் யார்? எங்கிருந்து வருகிறீர்? வருகிற காரியமென்ன? விளங்கச்சொல்லும்" என்றாள்.

அதற்கு அந்த மௌடீகனாகிய துரியோதனன் அவள் மனது கரையுமென்றெண்ணி, "அம்மா, இளமயிலே! நான் அஸ்தினா புரத்தை ஒரு குடைக்கீழ் ஆளும் மன்னன். இவ்வுலகமெல்லாம் எனக்கடங்கியிருக்கிறது. இருந்தாலும் பெண்ணாசை பிடித்துப் பேயாய் அலைகிறேன். நீ என்மீது சற்று மனமிரங்கு. இங்கே கிருஷ்ணன் தங்கை சுபத்திரை இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவள் புருஷன் அர்ச்சுனன் காட்டுக்குப் போய்விட்டான். இனி

மேல் வரப்போகிறதில்லை. அவன் மாத்திரமல்ல பாண்டவர்கள் ஐவரும் அதோகதியாப்ப் போய்விட்டார்கள். சுபத்திரைக்கு இனி மேல் அர்ச்சுனன்மேல் ஆசைவைத்து என்ன பிரயோஜனம்? அவள் மேல் நான் அளவற்ற ஆசை வைத்திருக்கிறேன். அவளாசையால் எனது அங்கம் உருகுகிறது; மனது மடிகிறது. இந்த இரகசியத்தை வேறொருவருக்கும் சொல்லாமல் அல்லிக்கு மட்டும் அந்தரங்கமாய் உரைத்து அந்த சுபத்திரையை என்னோடனுப்பி விட்டால் உனக்கு வேண்டிய வெகுமதிகள் கொடுப்பேன்" என்றான்.

இதைக்கேட்ட பவளவல்லி, பதைபதைத்துத் துடிதுடித்து, அல்லியிடம் சென்று சேதியைச் சொன்னாள். அல்லி அதைக்கேட்கவும் மிகவுங் கோபங்கொண்டாள். பிறகு கோபஞ்சிறிதடங்கி அவனை அவமானப்படுத்தி அனுப்பவேண்டும், என்று தீர்மானித்து பவளவல்லியை நோக்கி "நீபோய், அவனிடம் 'சுபத்திரை உம்மீது மிகவும் இச்சை கொண்டிருக்கிறாள். நீர் எப்பொழுது வருவீரென்று காத்திருந்தாள். அவள் விருப்பப்படியே வந்துவிட்டீர். ஆனால் இவ்வளவு சேனை பரிவாரங்களோடு வந்தது அவளுக்குப் பிடிக்கவில்லை. நீர் உம்முடைய ஊருக்குத் திரும்பிப்போய், மூன்றுநாள் கழித்து சேனை பரிவாரம் ஒன்றுமில்லாமல் வாரும். உம்மை ஆசையாய் ஏற்றுக்கொள்வாள்' என்று சொல்லி அனுப்பி வீட்டுக்குச் சீக்கிரம் வா" என்றாள்.

பவளவல்லி அங்ஙனமே சென்று அல்லி கூறியபடி துரியோதனனுக்கு ஆசைவார்த்தைகள் கூறினாள். அவனும் அதை நம்பி மூன்றுநாள் பொறுத்து வருவதாகச் சொல்லிப் போய்விட்டான். பிறகு பவளக்கோடி, அல்லியிடம் வந்து அவனை அனுப்பிவிட்டசெய்தியைச் சொன்னாள். அதைக்கேட்டுக்கொண்டு அல்லி அவளைப் பார்த்து "பவளக்கோடி, நம் மதுரைப் பட்டணத்தில் ஏழு தச்சர்கள், ஒரு தாய்வயிற்றில் பிறந்தவர்கள், மகாசமர்த்தர்கள் இருக்கிறார்களல்லவா? அவர்கள் எழுவரையும் உடனே சென்று அழைத்துவா" என்று உத்தரவு செய்தாள். பவளக்கோடி அங்ஙனமே

சென்று தச்சர்கள் எழுவரையும் அழைத்துவந்து அல்லியின் முன் விட்டாள்.

அல்லி அவர்களை நோக்கி "தச்சர்களே, ஒரு சூஸ்திர ஏணி செய்யவேண்டும். அது எப்படி யிருக்கவேண்டுமென்றால்,

"காலால் உதைகொடுத்தால் கடுகளழும்ப வேண்டும்
அந்தரத்தில் அவ்வேணி அதிசயமாய்த் தான்பறக்க
ஒன்ப திரத்தினத்தால் ஒளிகள் பளபளென்ன
பத்துப்படிகளதில் பதிக்கவேண்டும் இரத்தினத்தால்
ஒவ்வொரு படியதனில் ஒவ்வொரு மங்கையையும்
அந்தந்தப் படியதனில் அவளவளைப் போலெழுதிப்
பத்தாம் படியதனில் பாவையந்த சுபத்திரைபோல்
எழுதி யிருக்கவேண்டும் ஏறினோர் உடலிலுள்ள
பக்கம் பதினாறு பழுவெலும்பு முறிப்பதற்குக்
கீலுக்குக் கீலாணி கெட்டியாய்த் தைத்தவுடன்
உள்ளங்கால் வசியேறி உச்சியிற் பாயவேண்டும்
கபாலந் திறந்திரண்டு கண்கள் முழிபிதுங்கி
விசையேணி முறுக்கிவிட்டால் மேலே விரைந்தெழும்பிக்
காற்றாடி போலந்தக் கனவேணி அந்தரத்திற்
பறந்து வரவேண்டும் பாரிலுள்ள நாடுகளில்
கண்டார்கள் தாஞ்சிரித்துக் காறி யுமிழவேண்டும்
அதனைக்
காலாலே தட்டிவிட்டால் காற்றைப்போ லெழும்பி
கையாலே தட்டிவிட்டால் மண்ணிற் பதிய வேண்டும்
போவென்றாற் போவதற்கே நில்லென்றால் நிற்பதற்கே
இப்படிச் சூஸ்திரமாய் * *

ஏணியொன்று செய்யவேண்டும். அப்படிச் செய்தால் உங்களுக்கு வேண்டிய வெகுமானந் தருவேன்" என்றாள்.

தச்சர்கள் அப்படியே ஒரு சூஸ்திர ஏணி செய்து கொடுத்தார்கள். மூன்றாம் நாள் துரியோதனன், தன் மனைவி முதலியவர்களிடத்

திலும், சகுனியிடத்திலும் தான் சுபத்திரையை நாயகியாகப் பெறப் போகும் பெருமையைச் சொல்லிக்கொண்டு புறப்பட்டு மதுரை வந்து சேர்ந்தான்.

அவன் வந்ததை அறிந்த தாதியர்கள் உடனே அவனை எதிர் கொண்டழைத்து வந்தார்கள். கொலுமுகத்தில் சூஸ்திர ஏணி வைக் கப்பட்டிருந்தது. ஏற்கனவே அல்லி கட்டளையிட்டிருந்தபடி தாதி ஒருத்தி அவனை நோக்கி "மன்னவரே, இதோ இருக்கும் ஏணி மீதேறி அதிலுள்ள புதுமைகளைப் பார்த்துவிட்டு வாரும். சுபத் திரையை மணக்கலாம்" என்றார்கள்.

துரியோதனனும் வெகு சந்தோஷமாக ஏணிமீதேறி, அங் குள்ள வேடிக்கையைப் பார்த்துக்கொண்டே பத்தாம்படி மீது கால் வைத்தான். அங்கே சுபத்திரையைப்போல் பதுமையொன்று செய்து படுக்கவைத்திருந்தது. அதைக் காணவும் துரியோதனன் "ஏந்தி ழையே! துணையின்றி இங்கே நீ ஏன் படுத்தாய்?" என்று சொல்லி அதைக் கட்டித் தழுவினான். அப்பொழுது அப்பதுமையில் வைத் திருந்த சூஸ்திர ஆணிகள் இவன் உடம்பிற் பாய்ந்தன. அதனால் மிகவும் வேதனைப்படும்பொழுது ஏணி சாய்ந்து கீழே விழுந்தது.

அப்பொழுது அல்லி அவன் அவஸ்தைப்படும்படி நேரிட்ட வர லாற்றை ஒரு ஓலையிலெழுதி, அதைப்படித்துப் பார்த்துவிட்டுத் திரும் பவும் குடுமியில் முடிந்து காலால் உதைத்துவிடும்படியும், அதன் பின்னாக எழுதி, அதை அவன் தலையில் முடிந்து தச்சர்களைக்கொண்டு ஏணியை முறுக்கித் தன்னைப்பெற்ற பாண்டியரிடத்து அனுப்பினாள். அவர்கள் அதைப் படித்துப் பார்த்துவிட்டுக் காலால் உதைத்தார்கள். ஏணி பறந்துவந்து அல்லி கொலுமுகத்தில் விழுந்தது அல்லி அதை மறுபடியும் தச்சர்களைக்கொண்டு ஆதிசேஷனிடத்திற்கு அனுப்பி னாள். ஏணி ஆதிசேஷனிடம் போய்சேர்ந்தது. ஆதிசேஷன் ஓலையைப் படித்துவிட்டு ஏணியைக் காலாலுதைத்தான். ஏணி அல்லி சமுகத் தில் வந்து விழுந்தது. இவ்விதமே அல்லி அவ்வேணியை உதைத் துதைத்து மேகராஜன், போகராஜன், சேராம்புராஜர், கிருஷ்ணன்

ஆகிய இவர்களிடத்து அனுப்பினுள். இவர்கள் ஒவ்வொருவரும் ஓலையைப் படித்துப் பார்த்துவிட்டு ஏணியைக் காலால் உதைத்து அனுப்பினுர்கள்.

அப்பால் அல்லி பாண்டவர்களுக்கு ஒரு திருமுகமெழுதி, அதில் தனது மருமகள் கலந்தாரி கர்ப்பமாயிருப்பதாகவும், அவள்,

கர்ப்ப மசக்கையினுல் கனிகள் விரும்புகின்ருள்
காட்டிற் பழுத்துதிரும் கனிவர்க்க மத்தனையும்
வேரிற் பழம்பழுத்து வெடித்த பலாப்பழமும்
கொச்சித் தமர்த்தைகளும் கொடிமுந் திரிப்பழமும்
மாதுளம்பழம் வாழைப் பழநெல்லிப் பழமாங்காய்
காட்டுமாம் பழமிலந்தை களாக்காய் விளாங்காய்கள்
அன்னதா ழம்பழம் பாலைப்பழம் நாரத்தை
கிச்சிலி முதலியவாம் இத்தனை விதப்பழமும்
பரிந்து பரித்தெடுத்துப் பாவியிவன் முதுகில்
மூட்டையாய்க் கட்டிவிட்டு * *

ஏணியைக் காலாலுதைக்கும்படியும் எழுதி, அதை முன் கட்டியிருந்த ஓலையோடு சேர்த்து முடிந்து ஏணியை முறுக்கி பாண்டவர்களிடத்து அனுப்பும்படி தச்சர்களுக்குக் கட்டளையிட்டாள். தச்சர்கள் அங்ஙனமே அனுப்பினுர்கள்.

ஏணிசென்று பாண்டவர்கள் முன்னிலையில் விழுந்தது. தருமர் துரியோதனன் இருக்கும் நிலையைப் பார்த்து மிகவும் மனம் வருந்தினுர். சகாதேவன், தருமர் கட்டளையின்படி துரியோதனன் குடுமியிற் கட்டியிருந்த ஓலைகளை அவிழ்த்துப் படித்தான். அப்படிப் படிக்கும் பொழுது துரியோதனன்,

சுபத்திரைமே லாசைகொண்டு துடுக்காக வந்ததுவும்
மாதரைக் கற்பழிக்க வலுவந்தம் பண்ணினதும்
அருச்சுனன் தேவியரை அழிம்புசெய்ய வந்ததுவும்
எழுபதொட்டைப் பொன்னதனை ஏந்திழைக்குத் தந்ததுவும்
அழிம்புசெய்ய வந்தவனை அல்லி யழிம்புசெய்து
(அவ்) வேணியாம் வாகனத்தில் ஏற்றியனுப்பியதும்

மற்றுள்ள வபணமெல்லாம் வரிசையாய்த் தெரிந்ததனல்
தருமர் மரம்போலே ஒருபக்கம் நின்றுவிட்டார்.

மற்ற நால்வரும் சீறிக் கொதித்தெழும்பிச் சிரசைத் துணிக்க வந்தார்.

ஏந்திழையாள் பாஞ்சாலி யெரியுந்தழல்போலே
என்னைத் துகிலுரிந்த ஈடழிவான் படுபாவி
மற்றுமந்தப்பெண்களையும் வலதழிக்க வந்தானே
என்று மனங்கொதித்தாள் கோபித்தா லெல்லாரும்.

தருமர் மட்டும் சிறிதும் கோபியாது மற்றவர்களைப்பார்த்து,

பொறும் பொறும் தம்பியரே பொறுத்தால் குறைவருமோ
பொறுத்தார்கள் நாடாள்வார் பொங்கினர் காடாள்வார்
இவன்,
பெண்களை யழிக்கவந்தான் பெண்களால் சீர்குலைந்தான்
நெருப்புக்கு முன்னெதுவும் நில்லா விதம்போலக்
கற்புக்குக் குறைசிறிதும் காசினியில் நேராது
கற்பே பெருநெருப்பாம் கற்பே பெரும்புகழாம்
* * * * * * *
கற்புடைய நமதுபெண்கள் பொற்புடனே செய்தவிது
போதும் இவனையின்னும் என்னசெய்யப் போகின்றீர்
அடாதன செய்தவர்கள் படாதன படுவரென்ற
பெரியோர் மொழியிவனல் பிரபலமாய் விட்டதனல்
இவன்,
படும்பாடே போதுமென்று பக்குவமாய் விட்டிவனைக்
கொல்லாமல் நீக்குவதே நல்ல தொழிலாகும்

என்று இதவசனங்கள் கூறினர். அதைக்கேட்டு வீமன் முதலியவர்கள் கோபந்தணிந்தார்கள். மற்றொரு ஓலையைப் படித்தபொழுது,

கட்டழகி மருமகட்குக் கலந்தாரி நாயகிக்குச்
சீமந்தஞ் செய்வதற்குத் தித்திக்கும் நற்கனிகள்
காட்டிற் பறித்தெடுத்துக் கட்டிபொருமூட்டைசெய்து
பாவிமுதுகினிலே பக்குவமாய்க் கோத்தனுப்பி

வையுங்கள் மைத்துனரே என்றிருந்த சேதிதனைக்
கண்டு சிரித்தார்கள் காரிகையின் கையெழுத்தைப்
பார்த்துக் களித்தார்கள் பாராளும் வேந்தரவர்.

தருமர் மட்டும் மனம்வருந்தி வீமனைப் பார்த்து "மதவீமா அவள் மனதின்படியே செய்" என்று சொல்லி அப்பாலே போய்விட்டார். வீமன் காட்டில் நுழைந்து அங்குள்ள காய்கனிகளையெல்லாம் பறித்து வந்து ஒரு பெருமூட்டையாகக் கட்டி துரியோதனன் முதுகில் கோர்த்துச் சொருகிவிட்டு அவன் முகத்தில் காறியுமிழ்ந்தான். அதன் பிறகு அர்ச்சுனன் வந்து காறியுமிழ்ந்தான்.

அதன்பிறகு நகுலன் ஓடிவந்து உமிழ்ந்தான். அதன்பிறகு சகாதேவன் வந்து உமிழ்ந்தான். பிறகு பாஞ்சாலியும் வந்து அவன் பாழ்முகத்தில் காறியுமிழ்ந்தாள். எல்லாரும் உமிழ்ந்தானதும் மத வீமன் ஓடிவந்து ஏணியை எட்டி உதைத்தான்.

ஏணி ஆகாயத்திற் பறந்தெழும்பி சுழன்று சுழன்று சென்று அல்லி கொலுமுகத்தில் விழுந்தது. பிறகு அல்லி, கலந்தாரிக்கு ஓர் ஓலையெழுதி அவன் குடுமியிலே முடிந்து தச்சர்களை வரவழைத்து விசையை முறுக்கிவிடச் சொன்னாள். அவர்கள் அப்படியே செய்தார்கள். ஏணி பறந்துசென்று கலந்தாரியிடம் விழுந்தது. அவள் ஓலையைப் படித்துப்பார்த்துவிட்டுப் பழங்களை எடுத்துக்கொண்டு, ஏணியைக் காலாலுதைத்தாள். ஏணி பறந்துவந்து திரும்பவும் அல்லி கொலுமுகத்தில் விழுந்தது.

பிறகு அல்லி ஏணியை அஸ்தினபுரத்திற்கு அனுப்பினாள். அங்கே ஏணிசென்று கர்ணன் முன்னிலையில் விழுந்தது. கர்ணன் துரியோதனன் படும்பாட்டைக்கண்டு பரிதாபப்பட்டு ஏணியைக் கையாலெடுத்தான். ஏணி மண்ணில் அழிந்தியமேதயொழிய எழும்ப வில்லை. பிறகு துரியோதனன் குடுமியில் முடிந்திருந்த ஓலையை அவிழ்த்துப் படித்துப்பார்த்துவிட்டு வேறு வழியில்லை யென்று வருத்தப்பட்டு, கர்ணன் ஏணியைக் காலாலுதைத்தான். ஏணி மதுரை நோக்கிப் பறந்துசென்றது. கர்ணனும் அதைத் தொடர்ந்து சென்றான்.

4

ஏணிசென்று அல்லியின் கொலுமுகத்தில் விழுந்தது. அப்பொழுது அல்லி மகன் புலந்தரன் துரியோதனன் படும் பாட்டைக் கண்டு பரிதாபப்பட்டு, தாயிடம் போய்,

என் தாயே இவன்தனைநீ எப்போது விடுவாயோ
பார்க்க எனக்குமெத்தப் பரிதாபம் ஆகிறதே
இந்த வதைதனைநான் எந்நேரம் பார்ப்பதம்மா
ஆர்சொன்னு லேணியைநீ அவிழ்ப்பாய் * *

எனக்கேட்டான். அதற்கு அல்லி,

துவாரகா புரியரசர் கோபாலர் வந்துசொன்னால்
காசிவள நாடாளும் கர்ணரிங்கு வந்துசொன்னால்

நான் ஏணியை அவிழ்ப்பேன் என்று உரைத்தாள்.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போது கர்ணனும் அங்குவந்து சேர்ந்தான். அல்லி, அவனை வரவேற்று உபசரித்தாள். அவள் உபசாரத்தை ஏற்றுக்கொண்ட பிறகு, கர்ணன் துரியோதனனைப்பற்றிப் பரிந்து பேசிக்கொண்டிருந்தான். அச்சமயத்தில் கிருஷ்ணரும் அங்கே வந்தார். அல்லி அவருக்கு ஆசனங்கொடுத்து அமரச் செய்தாள்; அவரிடத்தில் துரியோதனன் செய்த கொடுமைகளையும் அதற்குத்தான் செய்த தண்டனையையும் கூறினாள். அப்பொழுது அவள் தன் எதிரே ஓடிவந்த புலந்தரனை வாரியெடுத்து, அவனுக்குக் கிருஷ்ணனையுங் கர்ணனையுங் காட்டி,

இவரை,
மாமாவே என்றழைத்து மலர்தூவித் தெண்டனிடு
இவரை,
அண்ணாவே என்று சொல்லி அடிபணிந்து தெண்டனிடு

என்றாள். அதுகேட்ட புலந்தரன்

இவரை,
மாமாவே என்றழைத்து வணங்கத் தடையில்லை
இவரை,
அண்ணாவே என்றழைப்ப தெப்படி மாதாவே

தேர்ப்பாகன் பிள்ளையென்று தெரிந்திருந்தும் நானிவற்கு
தெண்ட னிடலாமோ சேவிக்க ஞாயமுண்டோ

என்று கேட்டான். அதற்கு அல்லி அநேக நியாயங்களைச் சொல்லி, "கர்ணரை நீ அண்ணுவென வழைத்து கும்பிட்டாற் குற்றமில்லை" என்றாள். தாய்சொல்லைத் தட்டாமல் புலந்தரனும், கிருஷ்ணனையும் கர்ணனையும் நமஸ்கரித்தான். கர்ணன் தன்னை வந்துபணிந்த மைந்தனைக் கட்டி யணைத்துக் கனிவாயை முத்தமிட்டான். பிறகு அல்லி மனமிரங்கி தச்சர்களை அழைத்து துரியோதனனை ஏணியினின்றும் விடுவிக்கும்படி உத்தரவுசெய்தாள். தச்சர்கள் அங்ஙனமே வசிகளனைத்தையும் கழற்றி அவனை விடுவித்தார்கள். ஏணியிலிருந்து விடுபட்டதும், துரியோதனன் கர்ணனிடம் இரகசியமாய்ப் புலந்தரனைப் பிடித்தணைத்து,

முத்தி கொடுப்பதுபோல் முகத்தை நெரித்துவிடு
கட்டியணைப்பதுபோல் கழுத்தை முறித்துவிடு
முளையிலே கிள்ளிவிட்டால் விளையா தொழிந்துவிடும்

என்றான். இதைக்கேட்டிருந்த புலந்தரன், கர்ணனுக்கும் கிருஷ்ணனுக்கும் கண்காட்டி, அவர்களை சாக்ஷிவைத்து "அன்னைக்கு இதை அறிவிக்கிறேன்" என்றான். கிருஷ்ணனும் கர்ணனும் அவன் கோபத்தை ஆற்றி சமாதானப்படுத்தி அல்லியிடம் ஒன்றும் உரையாதபடி செய்தார்கள்.

பிறகு கர்ணன் அல்லியிடம் விடைபெற்று, துரியோதனனைப் பல்லக்கில் வைத்து மூடி எடுத்துக்கொண்டு அஸ்தினுபுரம் சென்று சேர்ந்தான். துரியோதனனும் பிறகு மதுரையை நினையாமல் தன்னரசைத் தாளுண்டு சுகித்திருந்தான்.

இந்நூல் வெண்கலிப்பாவால் இயன்றுள்ளது. வெண்கலிப்பாவின் இலக்கணம் வருமாறு:—கலித்தளை தட்டுக் கலியோசை தழுவி வந்து ஈற்றடி முச்சீரால் முடியுமானல் அது வெண்கலிப்பா என்னப்படும்.

# பிழை திருத்தம்

| பிழை | | திருத்தம் |
|---|---|---|
| வரி. 320 வருவவனென்று | ... | ... வருவனென்று |
| ,, 1123 செலவனென்ருள் | ... | ... செல்வனென்ருள் |
| பக்கம் 48 வரி 34. வாக்குழந்தை | ... | ... உவாக்குழந்தை |
| ,, 73 வரி 26 குடிமி | ... | ... குடுமி |

73 - ஆம் பக்கத்தில் 4-வது வரிமுதல் 10-வது வரிவரை விட்டுவிடவும்.

பரமபதி துணை

வித்வசிரோமணியாகிய புகழேந்திப்புலவர் இயற்றிய

# ஏணியேற்றம்

(விநாயகர் துதி)

[1] வெண்கலிப்பா

[2] முந்திமுந்தி விநாயகனே முக்கணனார் தம்மகனே
கந்தருக்கு முன்பிறந்த காரானை மாமுகனே
கரியநிறத் திருமாலின் கண்ணான மருமகனே
அம்மை உமையளித்த அருமைத் திருமகனே
ஆதி சிவன்மகிழும் அரியதொரு கண்மணியே
சோதிச் சுடரொளியே தோன்றாத [3] விண்மணியே
பாதச் சிலம்பொலிக்கப் பருஞ்சதங்கை கலகலென்ன
நாதத் தொனியுடனே பாத மலர்மணக்க
அன்புவைத் தென்னாவில் அருள்கூர்ந்து முன்னடந்து
முன்பாக நீவந்து முடிய வருள்கொடுத்துத்
தடையொன்றும் வாராமல் தயவாகிப் பெரியோர்கள்
ஒப்பும் படியெனது தப்புகளை நீக்கியிந்த
ஏணியேற் றம்பாட என்னாவிற் குடியிருந்து
[4] வேணி யான்குமாரா வேண்டுமெனை ஆதரிப்பாய்

---

1 இதன் இலக்கணத்தை முகவுரையிற் காண்க.

2 'முந்தி முந்தி' என்பதற்கு முன்னே முன்னே உள்ள = முந்தியவைகளுக்கெல்லாம் முந்தியுள்ள (அல்லது) முந்தியென்று சொல்லமுடியாத முந்தி=அநாதியாயுள்ள என்பது பொருள். இதனை விரிக்கிற் பெருகும். இதுபற்றியே, ஸ்ரீமன் - மாணிக்கவாசகசுவாமிகளும், தமது திருவாசகத்தில் 'முன்னானை, மூவர்க்கும் முற்றுமாய், முற்றுக்கும் பின்னானை' என்றும், 'முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே, பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே' என்றும் அருளிச்செய்தனர். 'முன்னவனே யானை முகத்தவனே' என்றார் பிற ஆன்றோரும்.

3 விண்மணி - சூரியன். 4 வேணி - சடை, ஆறு.

(சுப்பிரமணியர் துதி)

வள்ளி கணவாவுன் மாமலர்நேர் தாள்போற்றி
துள்ளுங்கோ ழிக்கொடியோய் துய்ய வடிபோற்றி
கந்தா கடம்பா கதிர்வேலா தாள்போற்றி
நந்தா முகுந்தனுக்கு நன்மருகா தாள்போற்றி
உன்தன் அருளாலே நிந்தையெ லாமகல
வந்தெனது நாவினிலே வாஞ்சையாய் வீற்றிருந்து
கிருபை மிகக்கூர்ந்து கேட்ட வரமளித்து
மனது மிகக்களிப்பாய் எனது வினையொழிப்பாய்
சின்னஞ் சிறியேனுன் செப்புவேன் இக்கதையை
இடுக்கங்கள் எல்லாமும் இல்லாமற் செய்திடுவாய்
குறத்தி மணவாளா குற்றங்கள் தீர்த்தருள்வாய்
வடிவேலா செந்தமிழின் வளமை எனக்கருள்வாய்

(மஹாவிஷ்ணு துதி)

அண்டம் அளந்தவரே அரியென்னுங் காரணரே
[1] கொண்டல் நிறமுடைய கோபால நாரணரே
[2] மச்சாவ தாரங்கொண்ட மாயன் பெருமாளே
மெச்சவே யிவ்வுலகில் வெளிப்பட்ட திருமாலே
[3] கூர்மாவ தாரத்தைக் கூசா தெடுத்தவரே
நேர்மை யுடனமுதம் நிலைபெறக் கொடுத்தவரே
[4] வராகாவ தாரத்தை [5] வாகாகப் பெற்றவரே
[6] பராமுகம் இல்லாமல் பார்த்தனை யுற்றவரே
[7] நரசிங்க வுருவெடுத்து நலமுடன் வந்தவரே
திரமுடன் அனைவருக்கும் தினமுத்தி தந்தவரே
[8] வாமனு வதாரம் வந்தெடுத்த மாயவரே
தாம னெனும்பெயரைத் தரித்தீரே தூயவரே

---

1 கொண்டல் - மேகம்.
2 மச்சம் - மீன்.
3 கூர்மம் - ஆமை.
4 வராகம் - பன்றி.
5 வாகு - அழகு.
6 பராமுகம் - பராங்முகம் - பராக்கு முகம் - திரும்பினமுகம் - அசட்டை.
7 நரசிங்கம் - மனிதசரீரமும் சிங்க முகமும்.
8 வாமனம் - குறள் - குள்ளம்.

[1] பரசுராம வடிவெடுத்துப் பார்தனிலே வந்தவரே
முறையுடன் தேவரெல்லாம் [2] மூர்ச்சையாய்த் தாமடுக்க
[3] இராமாவ தாரமதில் இராவணனைக் கொன்றவரே
இதமாக இவ்வுலகில் எத்தனையோ வுயிர்சிதைக்கும்
[4] பலபத்ர வுருவதனைப் பார்த்தேன் கலப்பையினால்
வலமாகப் பைந்துளபம் மார்பி லணிந்தவையர்
கண்ண னெனும்பெயரைக் களிப்புடன் கொண்டவரே
வெண்ணெய் திருடியதை விரும்பிமிக வுண்டவரே
[5] கற்கியா யினியுலகில் களிப்போடு வருபவரே
நற்கதியை யாவருக்கும் நலமாகத் தருபவரே
இப்படிப் புகழ்படைத்த இணையில்லா [6] நேமியரே
செப்பும் உலகையுண்ட ஸ்ரீராம [7] சாமியரே
ஏணியேற் றம்மிதனை இன்ப முடனெழுதப்
[8] பாணியால் இக்கதையைப் பண்பாக நானெழுதக்
கூடவே நீரிருந்து குற்றங்கள் நேராமல்
பாடவே இக்கதைக்குப் பழுதுகள் வாராமல்
அறியா தவன்வாயால் ஆண்டவரே முடியுமையா
தெரியாதான் சிந்தையிலே தெளியவே செய்யுமையா
தக்க வரமெனக்குத் தந்திடுவீர் உச்சிதரே
மிக்க வரமருள்வீர் மேன்மையுள்ள அச்சுதரே

(சரசுவதி துதி)

வெண்டா மரையாளே வெற்றிசேர் சரசுவதியே
தண்டா மரைப்பதந்தா தயாள குணநிதியே
நல்வாக்குத் தந்தருள்வாய் நாரி மகேச்வரியே

---

1 பரசுராமன் - மழுவேந்திய ராமன்.
2 மூர்ச்சை - வாட்டம்.
3 இராமர் - ஸ்ரீராமர்
4 பலபத்ரர் - பலராமர்.
5 கற்கி - குதிரை. திருமால் தசாவதாரங்களும் "மெச்சுதிரு வேங்கடவா வெண்பாவிற் பாதியிலென், இச்சையிலுன் சன்மம் இயம்பவா—மச்சாகூர், மாகோலா சிங்காவா மாராமா ராமாரா, மாகோபா லாமாவா வா" என்ற காளமேகப்புலவருடைய பாடலாகிய வெண்பாப்பாதியில் அடங்கியிருத்தல் காண்க.
6 நேமியரே - சக்கரமேந்தியவரே.
7 சாமியரே - சாமியாரே - சாமியே - கடவுளே.
8 பாணி - கை.

புல்லன் சொலுங்கதையைப் புகழாக்கி வைப்பாயே
தப்பிதம் வாராமல் தயாபரியே யென்னாவில்
[1] ஒப்ப முடன்பொருந்தி உண்மையாய் நீநோக்கில்
சுத்தமா யிக்கதையைத் துரித முடன்முடிப்பேன்
நித்த முனைத்தொழுது நின்னாமம் நான்வகுப்பேன்
சற்றே மனதுவைப்பாய் தாயேயென் கண்மணியே
முற்றுமே நீயிருந்து முன்னடத்து நிர்க்குணியே

(பரமசிவன் துதி)

கயிலாயந் தனில்வாழும் கர்த்தாவே முன்னாளில்
மயிலான சாயலுமை மாதேவி தன்னுடைய
சேடியர்கள் தம்மேலே சிந்தை மிகச்செலுத்தி
வாடி யுமையடைந்த வன்றொண்டர் ஆலால
சுந்தரரைப் பூவுலகில் அந்தணர் ஆகவென்று
விந்தை யுடனுரைத்தீர் [2] விமலையும் சேடியரை
மண்ணுலகில் மாந்தருக்குள் பெண்களெனப்பிறப்பீர்
அண்ணலாம் ஆலால சுந்தரன் தனைமணந்து
சிலகாலம் வாழ்ந்திருந்து திரும்பியிங்கு வருவீரென்றாள்
திலக நுதலாரும் சென்றார்கள் பூவுலகில்
ஆலால சுந்தரரும் ஐயா வுமைவணங்கி
சீலா வுமைமகிழும் சிவனே அடியேனும்
பூவுலகிற் போய்ப்பிறந்தால் புண்ணியனே என்னரசே
சேவின் மிசையேறும் தேவா வுனைக்காண
எத்தனை காலமாமோ ஏதொன்றும் நானறியேன்
சித்தம் இரங்கியருள் செய்வாய் எனத்தொழுதார்
அப்போது சுந்தரரை அஞ்சாதே எனத்தேற்றி
மணம்விலக்கி யுனையாள்வோம் வாடாதே எனக்கூறி
அவர்க்கு விடையருளி அனுப்பிவைத்த படியேநீர்
மணம்விலக்கி ஆட்கொண்டீர் மங்கைப் பரவையிடம்
இருமுறை யவர்க்காக இணங்கியே தூதுசென்றீர்

---

[1] ஒப்பம் - ஒப்பு - உகப்பு - மகிழ்ச்சி. [2] விமலை = பார்வதி.

அவரும் மனமகிழ்ந்தார் ஐயா வுமைத்துதித்தார்
நாவார நற்றமிழில் நாங்களெல் லாம்பிழைக்கத்
தேவாரம் பாடிவைத்தார் சிவனே பரமேசா
ஏணியேற் றம்மிதனை யெல்லோருந் தாம்படிக்க
வாணி யருளெனக்கு வகையாக வேகிடைக்க
என்னுடைய வாயிலவள் எந்நாளுங் குடியிருக்க
அந்தமாம் இக்கதையை விந்தையாய் நான்முடிக்க
முந்தவே வந்திருந்து முழுதும் நடத்திவைப்பீர்
இந்தக் கதைதன்னை ஈடேறச் செய்திடுவீர்
தப்புகள் இல்லாமல் சாமி யெனைக்காப்பீர்
ஒப்பி விஷத்தையுண்ட உத்தமரே அருள்புரிவீர்

## கதையின் வரலாறு

கங்கைக் கரைமேலே தங்கும் புகழ்பொருந்தி
அழகிற் சிறந்தநகர் அஸ்தினு புரியாகும்
அஸ்தினு புரியாண்ட அரவக் கொடிமன்னன்
வணங்கா முடிதரித்த வல்லாண்மை உடையவனும்
திக்கெட்டும் பெயர்போன [1] திரியோ திரன்தனது
புத்திரன் லக்குணற்குப் பூணூல் [2] மணமென்று
பஞ்சவரை வரவழைத்துப் பகடைகள் சூதாடிப்
பஞ்சவர்தம் பத்தினியாம் பாஞ்சாலி துகிலுரிந்து
பஞ்சவரைப் பஞ்சைகள்போல் பத்தினி தன்னுடனே
பன்னிரண்டு வருஷங்கள் வனவாசம் பண்ணவென்றே
இரக்கஞ் சிறிதுமின்றித் துரத்திவிட்டான் மாபாவி
தனக்கெதிரி யில்லையென்று தாரணியை யாண்டிருந்தான்

(அர்ச்சுனன் தேவியர்கள் அல்லியிடம் சேர்ந்திருத்தல்)

ஐவரில்லா வேளையிலே அருச்சுனன் தேவியர்கள்
கொடிமதுரைப் பட்டணத்தில் கொம்பனையாள் அல்லியண்டை
அடைக்கலமாய்ச் சேர்ந்தார்கள் அனைவரும் ஒன்றாக

---

1 திரியோதிரன் = துர்யோதனன். 2 மணம் = கலியாணம்.

சுபத்திரை நாயகியும் தோகையந்த மின்னொளியும்
நாகர்கோன் பெற்றெடுத்த நாககன்னிப் பெண்மயிலும்
பங்கயம்போற் கண்ணுடைய பவளக் கொடியாளும்
போகேசன் பெற்றெடுத்த போகவதிப் பெண்ணரசும்
இத்தனை மங்கையர்கள் எல்லாரும் போய்ச்சேர்ந்தார்

(துர்யோதனன் சுபத்திரையை இச்சித்தல்)

அந்தச் சமயமதில் நிந்தைக் கிருப்பிடமாந்
[1] திரியன் படுபாவி தீங்கு நினைத்தானே
சுபத்திரையை அபகரிக்கத் [2] துரியோ திரன்நினைத்தான்
பத்தினிமேல் இச்சைகொண்டு பாவி மனம்சோர்ந்தான்
கச்சேரிக் கொலுமுகத்தில் கனமுடனே வீற்றிருந்தான்
ஒருவரையும் பாராமல் உறக்கம் பெரிதானான்
ஆரோடும் பேசாமல் அனந்தல் மிகுந்திருந்தான்
கச்சேரி கலைந்தார்கள் காவலர் சென்றார்கள்
கொலுகலைந்து போனபின்பு கொடிநாகன் வீற்றிருந்தான்
தனியா யிருக்கையிலே சர்ப்பக் கொடிவேந்தன்
காசிவள நாடாளும் கர்ணனைக் கையமர்த்தித்
தன்னோ டழைத்தானே தனியான மண்டபத்தில்
ஏகாந்த மண்டபத்தில் இருவரும் சென்றார்கள்
இவர்கள் இருவரன்றி எவருமே இல்லையங்கே
அப்போது கர்ணனவன் செப்புவான் ஒருவார்த்தை
[3] துரியன் தனைநோக்கிச் சொல்லுவான் வார்த்தையொன்று
வணங்கா முடிதரித்த மன்னர் பெருமானே
(உமக்கு) என்ன விசனமதை எனக்குரைக்க லாகாதோ
அன்பன் தனக்குரைத்தால் ஆறாதோ விசனமென்றான்
அவ்வார்த்தை கேட்டவுடன் அரசனவன் சொல்லுகின்றான்
கேளுமையா கர்ணரேநீர் கெட்டியாம் வார்த்தையொன்று
(நான்) நாட்டை விரும்பவில்லை நகரை விரும்பவில்லை

---

1 திரியன்
2 துரியோதிரன்
3 துரியன்
} - துர்யோதனன்.

கோட்டையும் வேண்டேனே கொத்தளமும் வேண்டேனே
சீர்மையும் வேண்டேனே செங்கோலும் வேண்டேனே
அலைகடல் சூழுமிந்த அவனியெல்லாம் ஆளுகின்றேன்
விருப்பம் எதிலுமில்லை விசனமும் இல்லையையா
ஐவரை ஓட்டிவிட்டேன் ஆருமில்லை எதிரெனக்குச்
சனியன் தொலைந்ததுவே சங்கடமும் தீர்ந்தேனே
நாடுநகர் சீர்மையெல்லாம் நானொருவன் ஆளுகின்றேன்
அதனால் விசனமில்லை அண்ணாவே ஆனாலும்
இப்போதொருவிசனம் என்தனக்கு மெத்தவுண்டு
(அதனை) உம்முடன் சொல்லாமல் ஒளிப்பேனோ அண்ணாவே
மாதர் குலக்கொழுந்தை மாயனுக்குத் தங்கைதனைச்
சோதி மணிவிளக்கைச் சுபத்திரை நாயகியை
என்தனக்குச் சொந்தமென இயம்பினார் பலராமர்
அதனால் அடியேனும் அவள்மேல் மனதானேன்
நாளுங் குறித்தார்கள் நறுமணஞ் செய்துகொள்ள
எனக்கென் றிருந்தபெண்ணை ஏந்திழையாள் சுபத்திரையை
குண்டுணிக் கிருஷ்ணனவன் கோபாலன் வஞ்சனையாய்
பலராமர் அறியாமல் பார்த்தீபன் அருச்சுனற்குச்
சந்நியாசி வேஷம்போட்டுச் சதுராக மணமுடித்தான்
அன்றுமுத லெனதுமனம் அலைகிற தென்னசெய்வேன்
வாடுகிற தென்மனது வருத்தம் வளர்கிறது
கவலை அதிகரித்துக் கலங்குகிறேன் அண்ணாவே
அவளாசை யாலடியேன் அங்கம் உருகுகின்றேன்
ஐவரில்லா வேளையிப்போ தவளும் தனித்திருப்பாள்
இதுவே சமயமந்த ஏந்திழையைக் கொண்டுவரப்
போனேனே யானால் பொருந்துவேன் அவளாசை
இதுவே தருணமண்ணா எழுந்திரும் போவோமென்றான்
அவ்வசனங் கேட்டவுடன் [1] அங்கர்கோன் மனங்கலங்கி
மனது மிகக்கலங்கி மன்னவனும் சொல்லலுற்றான்

---

[1] அங்கர்கோன் - கர்ணன்.

அடுக்குமோ இவ்வசனம் அரசாளும் மன்னவற்குத்
துடுக்குத் தனமாமோ துரைத்தனம் செய்வோர்க்கு (இங்கு)
அர்ச்சுனன் தேவியர்கள் அரிவையர்கள் எல்லாரும்
கற்புக் காசியர்கள் கருதலாமோ அவர்களைநீ
தம்பியின் தேவியைநீ தங்கையென வேண்டாமா
அண்ணன் மனைவியைநீ அன்னையென வேண்டாமா
(இந்தத்) தப்பு நினைப்புனக்குத் தகாதுகாண் மன்னவனே
அழிம்பு நினைவுகொள்ளல் ஆகாது மன்னவனே
(அவளைக்) கொண்டு வரநினைந்தால் குற்றம் பெரிதாகும்
கெடுவது நீநினைந்தால் விடுவது கருமமன்றோ
கேடுவரும் பின்னென்றால் மதிகெடும் முன்னென்பார்
எப்போதும் உனக்கிந்தத் தப்பெண்ணம் ஆகாது
தீய நினைவிதனைத் தெய்வம் பொறுக்காது
மறந்தும் அவளாசை மனதிலே வையாதே
கண்டவர்கள் ஏசியுன்னைக் கலியுகத்தார் நகைப்பாரே
தேவர் சிரிப்பாரே ஜெகத்தோர் பழிப்பாரே
மூவர் சிரிப்பாரே மூதுலகோர் பழிப்பாரே
தகாதிது மன்னவனே சற்றுந் தகாதுனக்கு (இங்கு)
என்வார்த்தை தள்ளியங்கே யேகுவா யாமானால்
மதுரைத் துரைச்சியண்டை மங்கையர்கள் சேர்ந்திருப்பார்
அல்லி அடைக்கலமா அனைவரும் சேர்ந்திருப்பார்
அடங்காப் பெருநீலி அல்லிமலர்ப் பெண்கொடியாள்
ஒருவருக்கும் அஞ்சாளே உலகாளும் பெண்பெருமாள்
உனது நினைவறிந்தால் உயிருடன் விடமாட்டாள்
(உன்னைப்) பிடித்து வதைப்பாளே பிழைத்துவர மாட்டாய்நீ
சூரத் துவமுடனே [1] தோரணக் கழுவேற்றி
வதைசெய்து கொல்வாளே மரியாதை தாழ்வாகும்
ஆகையால் அந்நினைவை அறவே மறவென்றான்

---

[1] தோரணக்கழு - குற்றவாளிகளின் உயிர்வாங்குங்கருவி; இது ஒரு பருமரத்துண்டில் நட்டுள்ள கூரிய இருப்புத்தடி. தோரணம்=வாகனம்; தோர்ணம்+கழு=கழு+தோரணம்=கழுவாகிய வாகனம்.

கர்ணன் உரையதனைக் கனமாக மதியாமல்
என்ன வுரைத்தாய்நீ இதற்கோ வுனையழைத்தேன்
போதுமப்பா நீயெனக்குப் புத்திமதி சொன்னகொள்ளை
உன்வார்த்தை கேட்டோநான் உலகத்தை ஆளுவது
தானே விழவேண்டும் தானே எழவேண்டும்
நண்பன் உரையைநம்பல் ஆகாதிந் நாளிலன்பாய்
ஒருவர்சொல் வார்த்தையென்றும் உறைக்குமோ என்தனக்குப்
பஞ்சவர்மேல் உன்தனக்குப் பக்ஷம் வளர்கிறது
ஐவர்மேல் உனக்கதிக ஆசை வளர்கிறது
பாண்டவர்கள் உன்தனக்கு வேண்டியவர் ஆனார்கள்
என்று வெறுத்துரைத்தான் எழுந்தான் திரியனவன்
கர்ணனைத் தூஷித்துக் கடுகவே தானடந்தான்
போட்டிருந்த பூணாரம் பொடிபொடியா யற்றுவிழ
தரித்திருந்த பூணாரம் தவிடுபொடி யாய்ப்போகத்
தங்க மிதியடிமேல் தானடந்தான் மன்னனவன்
தனது மனையாட்டி தங்குகின்ற அரண்மனையில்
பெருந்திருவாள் வாழ்மனையில் போரசன் வந்துநின்றான்
வந்துநின்ற மன்னவனை மாதேவி தான்கண்டு
திடுக்கிட் டெழுந்திருந்து தேன்மொழியாள் ஓடிவந்து
சிரமேற் கரங்குவித்தாள் தீர்க்கதெண்ட னிட்டுநின்றாள்
வந்தனங்கள் செய்தாளே மன்னன் முகம்பார்த்துக்
கைலாகு தான்கொடுத்துக் கணவனைக் கூட்டிவந்து
சிங்கா தனந்தனிலே சிறப்பா இருக்கவைத்துக்
கைகட்டி வாய்புதைத்துக் கணவன் முகநோக்கித்
திருவாய் மலர்ந்தருளித் தேன்மொழியாள் வினவுகின்றாள்
என்ன அவசரமாய் இவ்விடத்தில் வந்தீர்நீர்
வியர்வை மிகவரும்ப மேனியெல்லாம் கறுகறுக்கத்
திருமுகமுங் கருமுகமாய்த் திருவடிகள் கொப்புளிக்க
வந்த அவசரத்தை மன்னவரே சொல்லுமென்றாள்
மனைவி யுரைகேட்டு மாநாகக் கொடிவேந்தன்
சந்தோஷப் பட்டதனால் தையல் முகநோக்கி

உன்னையொரு மனுகேட்க வுத்தமியே ஓடிவந்தேன்
என்னவென் றுனக்கதனை இயம்புவேன் மாதரசே
மாது சுபத்திரைமேல் மையல் பெரிதானேன்
எண்ணாத் துயரமுடன் ஏக்கம் பெரிதானேன்
தூக்கந் துறந்தேனே சோற்றை மறந்தேனே
பூசையை விட்டேனே ஆசைவலைப் பட்டேனே
ஆசை அதிகரித்தேன் ஆயன்தன் தங்கையின்மேல்
என்தனக் கவளாசை இருக்கமனம் பிடிக்கவில்லை
அறுபது நாழிகையும் அவளாசை பெரிதாச்சு
அவளிடம்,
போக விடைகொடுத்தால் போய்வருவேன் பெண்ணரசே
அனுப்புவிப்பாய் என்றனை நீ அவள்வாழுங் கோயிலுக்கு
என்றா னதைக்கேட்டாள் ஏந்திழையாள் உடல்பதறி (இன்று)
நின்றாள் பதைத்தாளே நெருப்பிலிட்ட புழுவானாள்
பதைபதைத்தாள் தன்னுடைய பக்கமெல்லாம் துடி துடித்தாள்
முகமுங் கறுகறுத்தாள் முழிகலங்கித் திகைத்தாளே
வெதும்பி வெதும்பியவள் மேனியெங்கும் வியர்வையெழக்
கண்ணீர் வடிந்ததனால் கலத்தண்ணீர் தானுதிர்த்தாள்
முத்துமுத்தாய்க் கண்ணீரை முன்மடியிற் சோரவிட்டாள்
மனமுந் துணிந்ததுவோ மாநாகக் கொடியோரே
குணமுந் துணிந்ததுவோ கோபாலன் தங்கையின்மேல்
இச்சையைக் கொண்டவிதம் ஏற்குமோ வுந்தமக்குப்
பொறுக்குமோ இவ்வார்த்தை பூமியை ஆள்பவர்க்கு (இங்கு)
அடுக்குமோ இவ்வார்த்தை அரசாளும் வீரியர்க்கு
வார்த்தையிது சொன்னாலும் மானம் அழிந்துவிடும்
பேச்சிது பேசினாலும் பெருமை அழிந்துவிடும்
கெடுவார்த்தை சொன்னாலும் கீர்த்தி அழிந்துவிடும்
நீர்,
பத்தினிப் பெண்டுகளைப் பரிகாசம் செய்தாலும்
உத்தமப் பெண்டுகளை உதாசினம் சொன்னாலும்
கற்புக் கரசியரைக் கவடு நினைத்தாலும்

அருமையாம் பெண்டுகளை அழிம்பு நினைத்தாலும்
வீணாகப் போகாது வேந்தர் பெருமாளே
[1] அவளை நினைந்தாலும் அனர்த்தம் வருமுமக்குப்
பெரும்பழிக் காளாவீர் பேர்பெரிய மன்னவரே
அடாதன செய்தால்நீர் படாதன பட்டதனால்
நாடாளும் மன்னரும்மை நகைத்துப் பழிப்பார்கள்
ஊராளும் மன்னரும்மை உதாசினம் சொல்வார்கள்
சிவசிவா இவ்வார்த்தை செவியிலே கேட்கவைத்தீர்
தமயன் மனைவியர்கள் தாயார் மரியாதை
தம்பியின் தேவியர்கள் தான்பெற்ற பெண்களன்றோ
ஓதி உணர்ந்திருந்தும் உத்தமரே இவ்வார்த்தை
பேதையர் போலொருநீர் பேசவந்த காரணமேன்
அறியாதார் போலொருநீர் அழிம்புசொல்ல வந்ததென்ன
தெரியாதார் போலொருநீர் தீம்புசொல்ல வந்ததென்ன
காலை யருச்சுனர்க்குக் கணக்கில்லை மனைவியர்கள்
அத்தனை பெண்டுகளில் அதிகாரப் பெண்ணொருத்தி
முத்து நகையுடையாள் முடிதரித்த பெண்ணரசி
அணிமதுரை ஆளுகின்ற அல்லியெனும் பெண்பெருமாள்
உம்மைக்,
கண்டால் விடமாட்டாள் கழுவேற்றி வைப்பாளே
பார்த்தால் விடமாட்டாள் பாதவிக்க வைப்பாளே
சின்னங்கள் செய்வாளே சிறையி லடைப்பாளே
ஐவர் கடுஞ்சினத்தை அல்லியே காட்டுவளே
பஞ்சவர் கடுஞ்சினத்தைப் பாவையே காட்டுவளே
போனால் அதுதெரியும் பொன்முடி மன்னவரே
வெள்ளம் வருவதற்குள் அணைகோல வேண்டாமோ
போவது நல்லதல்ல பொன்மணக்குந் தென்மதுரை
வீண்பழி தேடாமல் வேந்தரே நில்லுமென்றாள்
அவ்வார்த்தை கேட்டவுடன் அசடன் திரியனுந்தான்
கதித்துக் கொதித்தெழும்பிக் கண்கள் பொறிபறந்தான்

1 சுபத்திரையை.

ஆடி பெண்ணேநீ அடுப்பூதி மாதரசே
அடுப்பூதி சொற்படியோ ஆளுவேன் பூமிதன்னை
எண்ணறக் கற்றுநன்றாய் எழுத்தறப் படித்தாலும்
நுண்ணறி வுடையோராய் நூலொடு பயின்றாலும்
பெண்ணறி வென்பதெல்லாம் பேதமை என்பார்கள்
ஆதலால்,
என்ன தெரியவரும் ஏந்திழையே யுன்தனக்கு
சட்டி சுறண்டவரும் தையலே யிதுவன்றி
மற்றொன்றும் நீயறியாய் மன்னன் நெறிமுறைமை
விரிந்த தலைமுடிக்க விவேகமில்லா மாதொருநீ
கலைந்த மயிர்முடிக்கக் [1] கண்ணில்லா மாதொருநீ
மாதொருத்தி சொற்படியே மாநிலத்தை ஆள்வாரோ
பெண்ணொருத்தி சொற்படியே பெருநிலத்தை ஆள்வாரோ
அடக்கடி உன்குரலை அழுதகண்ணில் நீர்துடைத்து
மாற்றடி உன்குரலை மைவிழியில் நீர்துடைத்து
நிறுத்தடி உன்குரலை நீலவிழி நீர்துடைத்து
விருதாவாய்க் கண்ணீரை மேலே புரளவிட்டாய்
பெண்வார்த்தை கேட்டவர்கள் பெருமை யிழந்தவர்கள்
பேருலகில் மெத்தவுண்டு பேசாதே வாய்மூடு
தெரிந்தவர்கள் பெண்பேச்சுத் தேன்மொழியே கேளார்கள்
அறிந்தவர்கள் பெண்பேச்சை அரிவையே கேளார்கள்
உனது மதியிருந்த உபாயத்தை நானறிந்தேன்
இதுதானோ உன்னறிவு நானேனோ இங்குவந்தேன்
என்று மனஞ்சலித்தான் ஏந்திழையை யேசியவன்
அவ்விடம் விட்டெழுந்தான் அப்பால் நடந்தானே

(துர்யோதனன் மதுரைக்குவருதல்)

சுபத்திரைப் பெண்கொடிமேல் [2] சுயோதனன் இச்சைவைத்துத்
தனக்குள்ளே தான்தானே தன்மனதில் இச்சைகொண்டு
மதுரைக்குப் போவதற்கு மனதிலே எண்ணியெண்ணி
ஆரும் அறியாமல் அங்கொருவர் காணாமல்

1 கண் - அறிவு. 2 சுயோதனன் - துர்யோதனன்.

எவரும் அறியாமல் [1] இனியொருவர் காணுமல்
பெரியோ ரறியாமல் பிறஜனங்கள் காணுமல்
ஓர்,
[2] அக்ரோணி சேனையுடன் அநேகமுடி மன்னருடன்
வேட்டைபோய் வருவவனென்று விடைபெட்டுப் போனுனே
அந்தச் சமயமதில் அவனழகைச் சொல்லுகிறேன்
ஆடை அலங்கரித்தான் ஆபரணந் தான்பூண்டான்
மார்பில் பதக்கமிட்டான் வயிரமணி முடியணிந்தான்
தோளில் புஜகீர்த்தி துலங்கவே தான்தரித்தான்
கையிற்செங் கோலேந்திக் கணையாழி தானணிந்தான்
களபகஸ் தூரிகளைக் கலந்துமிகப் பூசினனே
சந்தன கதம்பமுடன் சவ்வாது பரிமளிக்க
சுபத்திரைமேல் ஆசையெனும் சுடுநெருப்பால் மனங்கொதிக்க
ஏறினன் யானையின்மேல் எடுத்தார் நெடுங்குடையை
அலங்கரித்த [3]அவுதாவில் யானைமேல் உட்கார்ந்தான்
பட்டுக் குடைகவியப் பாவலர்கள் எச்சரிக்க
வெள்ளைக் குடைகவிய வித்வான்கள் எச்சரிக்க
முத்துக் குடைகவிய முடிமன்னர் எச்சரிக்க
சாமரம் [4] பணிமாறச் சந்தனம் வீசிவர
ஆலவட்டம் பணிமாற அரிவையர்கள் தாம்பாடக்
கட்டியங்கள் கூறிவரக் கவிவாணர் பாடிவர
மத்தளங்கள் முழங்கிவர மகாசின்னம் ஊதிவர
பேரிகை யதிர்ந்துவரப் பெரிய [5] டங்கா வோலமிடத்
[6] தவண்டை [7]மல் லரியொலிக்கத் தம்பட்டங் கொட்டிவரப்
புள்ளாங் குழலூதப் போர்த் [8]தாரை ஊதிவர

---

[1] இனி - வேறு.

[2] அக்ரோணி - அக்குரோணி - அக்கோணி - பத்துலக்ஷத்தொன்பதினு யிரத்து மூந்நூற்றைம்பது காலாளும், அறுபத்தையாயிரத்து அறுநூற்றறு பது குதிரையும், இருபத்தையாயிரத்து எண்ணூற்றெழுபது இரதமும், இரு பத்தோராயிரத்து எண்ணூற்றெழுபது யானையுங் கொண்டது.

3 அவுதா - யானைமேல் தவிசு.
4 பணிமாறல் - இரட்டல் - வீசுதல்.
5 டங்கா - பெரும்பறை.
6 தவண்டை - ஒருவாத்தியம்.
7 மல்லரி - பம்பை.
8 தாரை - காளம்.

நாகசுர மூதிவர் நாகக் கொடியாட
அண்டங் கிடுகிடென்ன அதிர்கின்ற வாத்தியங்கள்
கணக்கு மிதங்களில்லை காதுஞ் செவிடுபடும்
பூமி நடுநடுங்கப் போர்மன்னர் போகையிலே
கருந்தூள் எழும்பியது கண்ணை மறைக்கிறது
செந்தூள் எழும்பியது திசையை மறைக்கிறது
மண்தூள் எழும்பியதால் வானம் மறைகிறது
[1] பல்லய வீரருடன் [2] பாங்கு முனைவீரர்
[3] பரிசைவைத்த வீரரெல்லாம் வரிசையாய்ச் சூழ்ந்துவர
ஈட்டி முனைவீரர் எழு [4]பாலா வீரருடன்
கத்திகட் டாரிகொண்டு காவலர்கள் சூழ்ந்துவர
[5] வளைதடி சக்கரங்கள் மன்னர் பிடித்துவரப்
பொற்பிரம்பைக் கையேந்தி புகழ்மன்னர் எச்சரிக்கக்
கூட்டமாய்ச் சந்தடியாய்க் கொற்றவனும் வருகின்றான்
ஓட்டமும் நடையுமாய் [6] ஊதாரி வருகின்றான்
அஸ்திர புரந்தாண்டி அவசரமாய் வருகின்றான்
கோட்டை மதில்கடந்தான் கொத்தளமுந் தான்கடந்தான்
நாட்டையுங் கடந்தானே நடந்தானே சேனையுடன்
துரிதமாய் வருகின்றான் சுபத்திரைமேல் இச்சைகொண்டு
காடு கடந்துவந்தான் கரியமலை தான்கடந்தான்
சில்லென்ற காடுவிட்டுச் செடிசேர் வனங்கடந்து
மலைகள் குகைகடந்து வருகின்றான் சீக்கிரமாய்
[7] காரை படர்ந்தவனம் கருங்களாப் பூத்தவனம்
[8] சூரை படர்ந்தவனம் [9] சொத்தைகளாப் பூத்தவனம்
அத்தி பழுத்தவனம் அரசு முளைத்தவனம்
[10] இத்தி தழைத்தவனம் எருக்கு முளைத்தவனம்

---

1 பல்லம் - அம்பு.
2 பாங்கு - பிச்சுவா.
3 பரிசை - கேடகம்.
4 பாலா - ஓராயுதம்.
5 வளைதடி - பாராவலையம்.
6 ஊதாரி - அழிம்புக்காரன்.
7 காரை - காரைச்செடி.
8 சூரை - ஒருசெடி, தூதுளை.
9 சொத்தைகளா - சொத்தைக்களா; ககரம்தொக்கது.
10 இத்தி - ஒருமரம்.

காடி உறங்குவனம் காட்டானை தூங்குவனம்
சிங்கம் உறங்குவனம் சிறுபுலி தூங்குவனம்
வனமா வனங்கடந்து வருகின்றான் அவசரமாய்
சீக்கிரந் தேடியவன் வருகின்றான் தென்மதுரை
தென்காஞ்சி முத்திறங்கும் தென்மதுரை வருகின்றான்
வடகாஞ்சி முத்திறங்கும் வளமதுரை வருகின்றான்
கிட்ட நெருங்கிவந்தான் [1] கெடியாருந் தென்மதுரை
சேர நெருங்கிவந்தான் சீராருந் தென்மதுரை
ஒருநாழி கைத்தொலையில் ஊதாரி தங்கினனே
கூடாரம் போட்டார்கள் குடிகேடன் [2] பாளையத்தில்
பாளையத்தின் பேரிகைகள் பட்டணத்தில் முழங்கினவே
புள்ளாங் குழலொலியும் [3] பூரிசின்னப் பேரொலியும்
நாக சுரத்தொலியும் நாலுபக்கம் கேட்டனவே
முழங்கினவே வாத்தியங்கள் மூதண்டம் தானதிர
ஒலித்தனவே வாத்தியங்கள் [4] உடுக்குலங்கள் தாமுதிர
அதிர்ந்தனவே வாத்தியங்கள் அவனியெல்லாம் கிடுகிடென்ன
வையகத்துச் சத்தமது வானவர்க்கும் அதிசயமா
அடித்தார்கள் பேரிகையை அண்டஞ் செவிடுபடப்
பாண்டிவள நாடாளும் பாவையல்லிப் பெண்பெருமாள்
மதுரைப் பதிவாழும் மாதரசி தன்செவியால்
கேட்டாளே பேரிகையின் [5] கெடியான ஓசைதனைக்
காதுருவக் கேட்டாளே மாதுநல்லாள் அவ்வொலியை
மந்திரத் தொழிற்குரிய மதியுடையாள் தனையழைத்தாள்
[6] பவளவல்லி என்னுமந்தப் பைந்தொடியும் ஓடிவந்தாள்
அல்லியின் அருகுவந்தாள் ஆலோசனைசொல்ல
அவளை அதிசயமா அல்லியம்மாள் தான்பார்த்து
மந்திரத் தொழிலியற்று மாதரசே இந்தவொலி
சந்திர சூரியரைத் தலைகீழாத் தள்ளிவிடும்

---

1 கெடி - கீர்த்தி.
2 பாளையம் - சேனை.
3 பூரி - ஒரு வாத்தியக்கருவி.
4 உடுக்குலங்கள் - நக்ஷத்திரக்கூட்டங்கள்.
5 கெடியான - பயங்கரமான.
6 பவளவல்லி = பவளசேனை.

அந்தா வானவரை அதிசயத்துக் குள்ளாக்கும்
இந்த விதவொலியை என்றென்றும் கேட்டறியேன்
ஒருநாளும் இல்லாத உச்சிதச் சத்தமிந்தத்
திருநாளிற் கேட்கின்ற திறமறியேன் பெண்கொடியே
சத்தம் பிறந்தவிடந் தனையறிந்து சீக்கிரமாய்
உத்தரம் சொல்லவேண்டும் ஒருநொடியில் நீயென்றாள்
சித்தப் படியறிந்து சீக்கிரமா வருகின்றேன்
என்றுசொல்லிப் பவளவல்லி எழுந்து நடந்தாளே
ஆசார வாசலைவிட் டவசரமாய் ஓடிவந்தாள்
கோட்டையின் வாசலண்டை கொம்பனையாள் வந்துநின்றாள்
உற்றுற்றுக் கேட்டாளே ஓசையின் காரணத்தைக்
காதுற்றுக் கேட்டாளே கனபேரிப் பேரொலியைத்
[1] திரியோ திரனென்று ஜெயபேரி முழங்கினதே
குருடன் மகனென்று குமுறினதே ஜெயபேரி
அநியாயக் காரன்பேர் அதிர்ந்ததே பேரிகையில்
கேட்ட வுடனந்தக் கிளிமொழியாள் பவளவல்லி
ஓட்டம் பெருநடையாய் ஓடிவந்து சொல்லலுற்றாள்
அல்லிமலர் நாயகிமுன் அன்பாகச் சொல்லலுற்றாள்
திரியோ திரன்பேரி ஜெயமுழக்கஞ் செய்கிறது
ஐவரையுங் காடாள அனுப்பியவன் ஜயபேரி
பஞ்சவரை அலையவிட்ட படுபாவி பேரியிங்கே
அதிர்கிறது கூடாரம் அடித்தான் அவனென்றாள்
அவ்வார்த்தை கேட்டவுடன் அல்லிமலர் நாயகிக்குக்
கண்கள் சிவந்தனவே கடுங்கோபம் பொங்கியது
பாவியந்த சண்டாளன் படுபாவி வந்தானோ
துஷ்டனந்த சண்டாளன் துரோகியவன் வந்தானோ
அழிம்பனந்த சண்டாளன் அசடனிங்கே யேன்வந்தான்
பாண்டவர்களைவரையும் பரதேசம் ஓட்டினானே
மன்னவர்களைவரையும் வனம்ஓட்டி விட்டானே
காவலர்களைவரையும் காட்டிற்செலுத்தினனே

1 திரியோதிரன் = துர்யோதனன்.

உத்தமர்களவரையும் ஊரைவிட் டோட்டிவிட்டான்
ஐவரையும் ஓட்டிவிட்டான் ஆளுகின்றான் படுபாவி
அவனிங்கு வந்தால்நீர் ஆருமெதிர் கொள்ளாதீர்
மரியாதை செய்யாதீர் வணங்கிமுடி சாய்க்காதீர்
பேசா திருங்களென்றன் பிரியமுள்ள தாதிகளே
என்றாள் அரசியவள் எல்லாரும் சம்மதித்தார்
பேரிகை ஒலிகேட்டும் பெண்டுகள் வாராமல்
சும்மா இருந்ததனால் சுயோதனன் பேர்மாற்றிக்
கர்ணன் பெயராலே கனபேரி அடியுமென்றான்
அங்கர்கோன் பெயராலே அடியுங்கள் பேரியென்றான்

(கர்ணன் வந்தானென்று பேரிகை அடித்தல்)

அப்படியே பாளையத்தில் அடித்தார்கள் பேரிகையைக்
கர்ணன்வந் தானென்று கனபேரி ஒலிக்கிறது (அங்கு)
அதிர்கின்ற பேரிகைகள் அணிமதுரை நகர்கேட்கப்
பூவி லவதரித்த பொற்கொடியாம் அல்லியதைக்
காதிலே கேட்டாளே கனமதுரை அல்லியவள்
ஆலோ சனைக்குகந்த அழகான பவளவல்லி
பெண்களுக்கு நாயகமே பெண்கள் சிகாமணியே
இப்போது வேறுசத்தம் இடிபோலக் கேட்கிறதே
அந்தஒலி இன்னதென்ன அரிவையே அறிவையென்றாள்
ஓடினாள் பவளவல்லி உண்மையாய் அப்போது
கேட்டாளே ஒலியதனைக் கிளிமொழியாள் காதாலே
அதிர்ந்தனவே பேரிகைகள் அவள்செவிகள் செவிடுபடக்
கர்ணன்வந் தானென்று கனபேரி முழங்கினவே
மதுரையிற் கேட்டனவே மன்னன்தன் பேரிகைகள்
சத்தத்தைக் கேட்டவுடன் சற்றுந் தரிக்காமல்
அல்லியண்டை ஓடிவந்தே அரிவையவள் சொல்லுகின்றாள்
ஓசையின் விவரமதை உற்றுற்றுக் கேட்டுவந்தேன்
காசிவள நாடாளும் கர்ணர்வந் தாரெனவே
அதிர்கின்ற பேரிகைகள் ஆய்ச்சியே என்றுரைத்தாள்

அவ்வார்த்தை தான்கேட்டாள் அல்லிமலர்ப் பெண்பெருமாள்
சந்தோஷ மானாளே தானதனைக் கேட்டவுடன்
அங்கநா டாளுகின்ற அரசர்வ ருகின்றாரோ
என்ன அலுவலுடன் இவ்விடத்தில் வருகின்றார்
வருகிற காரியத்தின் [1] வயண மறியவேண்டும்
வரச்சொல்லி பேரிகையை மாதேநீ அடியென்றாள்
அப்படியே பவளவல்லி அணிமதுரைக் கோட்டையின்தன்
மதில்மேலே பேரிகையை அடித்தாளே வரச்சொல்லி
அதிர்ந்ததே ஜயபேரி அணிமதுரைக் கோட்டையிலே
வரச்சொன்ன பேரிகைக்கு மன்னன் மனமகிழ்ந்தான்
சந்தோஷ மானானே தானதனைக் கேட்டவுடன்
சத்தத்தைக் கேட்டவுடன் மெத்த மனங்குளிர்ந்தான்
நான்போய் வருவனென்று நலமுடனே வெளியேறிப்
படைத்தலை வீரருக்குப் பண்பாகச் சொல்லிவிட்டு
நடந்தானே சீக்கிரமாய் மதுரை நகர்நோக்கி
ஒய்ந்த நடையழகும் ஒய்யாரக் கைவீச்சும்
அங்கி தலைப்பாகை அரைச்சட்டைப் [2] பொன்னழகும்
காலில் மிதியடியும் கைபிடித்த செங்கோலும்
ஆயுத பாணியாக அரசனவன் வந்தானே
கோட்டைக்குள்ளே நுழைந்தான் கொத்தளமுந் தான்கடந்தான்
பட்டணத்துக் குள்ளே படுபாவி வந்துவிட்டான்
மதுரைச் சிறப்பழகை மாபாவி பார்க்கையிலே
தென்னர் தெருவுகளும் தேரோடும் வீதிகளும்
மன்னர் தெருவுகளும் மாடோடும் வீதிகளும்
அரசர் தெருவுகளும் ஆனைசெல்லும் வீதிகளும்
பாடக சாலைகளும் பளிங்குமா மண்டபமும்
நாடக சாலைகளும் நவரத்ன மண்டபமும்
பவளப் படித்துறையும் பஞ்சவர்ண மேடைகளும்
முத்துப் படித்துறையும் மொய்குழலார் ஆடரங்கும்

1 வயணம் - வகை. 2 பொன் - சரிகை.

கண்ணாலே கண்டானே கருநாகக் கொடியனவன்
செம்பொன் படித்துறையும் சித்ரமணி மண்டபமும்
வெள்ளிப் படித்துறையும் வெயில்புகா மண்டபமும்
தங்கமணி மேடையின்மேல் தங்கச்சிம் மாதனமும்
கண்ணாடிக் [1] குர்ச்சிகளும் கனகரத்னக் கட்டில்களும்
பார்த்து மனமருண்டு பாவியவன் வருகையிலே
கண்டார்கள் தாதியர்கள் கடுகவே ஓடிவந்தார்
அல்லிமலர் நாயகியை அடிபணிந்து தெண்டனிட்டார்
ஆய்ச்சியே மாதாவே அடியேம் ஒருவார்த்தை
சொல்லுவேம் கேளுமம்மா [2] சுயோதனன் தூதனைக்
கர்ணர்வந் தாரென்று கனபேரி முழக்கினமே
கர்ணரைக் காணோமே கருநாகக் கொடியனவன்
துரியன் படுபாவி துரிதமாய் வருகின்றான்
ஒருவனும் வந்துவிட்டான் உட்கட் டாண்மனையில்
என்றுசொல்லக் கேட்டவுடன் ஏந்திழையா ளல்லியவள்
கர்ணர்தம் பேர்சொல்லிக் கபடனிங்கே வந்தானோ
அஞ்சாத நெஞ்சுடனே அரண்மனைக்குள் வந்தானோ
ஏதோ கவடுசெய்ய இல்லிடத்தில் நூறிவந்தான்
கர்ணர்தம் பேரழிக்கக் கசடனிங்கே வந்தானோ
வந்தா லவன்தனக்கு மரியாதை செய்கிறதோ
உள்ளே நுழைந்துவா உத்தரவு கொடுத்தவரார்
தெரியாதோ என்சேதி மரியாதை கெட்டவற்கு
நல்லது மாதரசே நானறிய வேண்டுமிதை
மந்திரப் பவளவல்லி மாதரசே இப்போது
தந்திரமா கவேநீ சண்டாளன் தனைக்கண்டு
வணக்கங்கள் செய்யாமல் வாசற் படியினின்று
அவனை,
உள்நுழைய ஒட்டாமல் ஒளிவீசும் கண்ணாளே
மூன்றாம் படித்தளத்தில் மொய்குழலே போயிருந்து
வந்த வயணமதை வகையாகக் கேட்டறிந்து

[1] குர்ச்சி (தெலுங்கு) - நாற்காலி. [2] சுயோதனன் - துர்யோதனன்.

திரும்பிவந்து நீயெனக்குச் செப்புவாய் தேன்மொழியே
என்றாள் அதுகேட்டாள் எழுந்தாள் பவளவல்லி
மூன்றும் படித்தளத்தில் மொய்குழலாள் வந்துநின்றாள்
வணங்கா முடிதரித்த சுயோதன மன்னனவன்
அவசரமா வருகின்றான் அரண்மனையில் தானுழைய
(அவன்) வருகின்ற அவசரத்தில் எதிர்நின்ற பவளவல்லி
ஆரையா மன்னவரே அவசரமாய் வருகின்றீர்
எந்தவூர் எச்சீர்மை எவ்விடம் இருந்துவந்தீர்
வந்த வயணமதை மன்னவரே சொல்லுமென்றாள்
பாராளும் ராஜனென்று பவளவல்லி அஞ்சிநின்றாள்
அவ்வார்த்தை கேட்டவுடன் அசடன் துரியனவன்
வருங்காலந் தெரியாமல் மௌடீகன் பேசுகிறான்
தனது பெருமைகளைத் தையலுக்குச் சொல்லுகிறான்
(அவள்) மனது கரையுமென்று மாபாவி சொல்லுகிறான்
கேளாய் இளமயிலே [1] கெடிஸ்தல பூபதிநான்
[2] எண்ணேழு தேசமெல்லாம் எனக்கடங்கி இருக்குமடி
[3] ஈரேழு லோகமெங்கும் எனக்குநிகர் யாருமில்லை
தரணியெல்லாம் என்னுடைய தலைமேல் சுமந்தாலும்
பூமியெல்லாம் என்னுடைய புஜமேல் சுமந்தாலும்
வையமெல்லாம் என்னுடைய வல்லமையில் ஆண்டாலும்
பெண்ணாசை அதிகரித்துப் பேய்போல் அலைகின்றேன்
மாதர்கள் ஆசையினால் மதிமயங்கி வாடுகின்றேன்
அஞ்சிப் பயந்துனக்கு வஞ்சியே சொல்லுகின்றேன்
இங்கே,
புருஷனில்லா மங்கையர்கள் பூவையர்கள் இத்தனைபேர்
ஆளனில்லா மங்கையர்கள் அரிவையர்கள் இத்தனைபேர்
கணவனில்லா மங்கையர்கள் காரிகைமார் இத்தனைபேர்
சிறையிருந்து வாடுகின்ற செய்தி தெரியவேண்டும்

---

1 கெடிஸ்தலம் - இராஜதானி. 2 எண்ணேழு - ஐம்பத்தாறு.
3 ஈரேழு - பதினான்கு.

அவர்கள்,
காய்க்கும் பிராயமதிற் கவலை யதிகரித்துப்
பூக்கும் பிராயமதில் ஏக்கம் பெரிதாகி
பிஞ்சுவிடுங் காலமதில் நெஞ்சம் நிலைகலங்கி
மானேர் விழிமடவார் ஏனோ சிறையிருப்பார்
பத்தினிப் பெண்டுகளில் பாரளந்தான் தங்கையவள்
சிறையி விருப்பதற்குச் சிவனெழுத்தே காரணமோ
அரிவை சிறையிருக்க அயனெழுத்தே காரணமோ
அழகில் மிகுந்திருக்கும் அவள்சிறையி விருப்பானேன்
எழில்விஜயன் காடுசென்றான் இனிமேல் வருவானோ
ஐவரந்த பாண்டவர்கள் அதோகதியாய்ப் போனார்கள்
எந்த வனத்திலவர் இறந்தாரோ இத்தனைநாள்
செத்து மடிந்தார்கள் சிவன்பாதம் சேர்ந்தார்கள்
மாண்டு மடிந்தார்கள் வைகுந்தஞ் சேர்ந்தார்கள்
(அவர்கள்) பேரு மறைந்தார்கள் பெருமாள் பதஞ்சேர்ந்தார்
அர்ச்சுனன்மே லாசைபந்த அரிவைக்கு மெத்தவுண்டு
இனிமேல் அவனாசை யிருந்தென்ன சுபத்திரைக்கு
நான்,
சுபத்திரைமே லாசைகொண்டு தோகையே யிங்குவந்தேன்
மற்றொரு மங்கைமேல் மனதில்லை என்றனக்கு
வேறொரு மங்கைதனை விரும்பிவர வில்லையடி
இன்னொரு மங்கையின்மேல் எனக்காசை யில்லையடி
அவளாசை அதிகரித்தென் அங்கம் உருகுதடி
ஆகையி னாலந்த அரிவையைத் தேடிவந்தேன்
இந்த ரகஸியத்தை யாரோடும் சொல்லாமல்
அல்லிக்கு நீயுரைத்தே அவளை அமர்த்திவைத்தால்
உனக்கு,
நாடு கொடுப்பேனே நகரமு நான்தருவேன்
வீடு கொடுப்பேனே வேண்டும் பரிசளிப்பேன்
சீக்கிரம் ஓடியிதைத் தேன்மொழியே சொல்லென்றான்
இவ்வசனங் கேட்டவுடன் ஏந்திழையாள் பவளவல்லி

திடுக்கிட் டகங்குலைந்து தீயில்விழும் புழுப்போல்
பதைபதைத்துத் துடிதுடித்துப் பாவை யுடல்நடுங்கி
விந்தையாய்க் கேட்டதெல்லாம் விவரமாய்ச் சொல்வதற்கு
மலரி லவதரித்த மங்கையிடம் ஓடிவந்தாள்
அல்லிஅ ருகில்வந்தாள் அலறி விழுந்தாளே
மெத்தப் பயந்தாளே மெய்ந்நடுக்கம் கொண்டாளே
சொல்லவாய் வாராமல் துடிதுடித்து நின்றாளே
பயந்துநின்ற மங்கைதனைப் பார்த்தல்லிப் பெண்பெருமாள்
ஏதுக்கும் அஞ்சாதே ஏந்திழையே சேதியென்ன
(அவன்) உரைத்த படியுரைக்க உனக்குப் பயமென்ன
சொன்ன படியுரைக்கத் தோகையே பயமென்ன
நானிருக்க நீயேனோ நடுங்குவா யெனவுரைத்தாள்
அப்போது பவளவல்லி அல்லி முகம்நோக்கி
ஏதென்றென் வாயாலே எடுத்துரைப்பேன் மாதாவே
படுபாவி யவன்சொன்ன பழிப்பான வார்த்தையைநான்
துரிய னவன்சொன்ன துடுக்கான வார்த்தையைநான்
படிமேலே ஏறுகையில் பார்த்தேனே மன்னவனே
அவன்,
வந்த வயணமதைக் கேட்டேன் வகையாக
மாது சுபத்திரைமேல் மையல் பெரிதாகி
அரிவை சுபத்திரைமேல் ஆசை பெரிதாகி
கரியமால் தங்கையின்மேல் காதல் பெரிதாகி
மயக்கம் அதிகரித்து மங்கையைத் தேடியேநான்
மதுரைக்கு வந்தேனே மன்னரந்த பாண்டவர்கள்
ஐவர் இறந்தார்கள் அதோகதியாய்ப் போனார்கள்
மன்னர் இறந்தார்கள் மாண்டு மடிந்தார்கள்
அர்ச்சுனன் தன்பெயரே அழிந்தது பூமியிலே
நாடாளு மன்னவனா நானிருக்கச் சுபத்திரைக்குக்
குறைச்ச லினியென்ன கூடியே வாழ்ந்திருந்தால்
நான்,
அரண்மனைக்குள் ளேவா அல்லியைநீ கேட்டுவந்தால்

வேண்டும் பரிசுனக்கு மெல்லியலே நான்தருவேன்
சொல்லிவா வென்றுனே துரைச்சியே எனவுரைத்தாள்
அவ்வார்த்தை கேட்டவுடன் அரசாளும் நாயகிக்கு
வேர்வை பொழிகிறது கோபம் மிகுந்தனலாய்
பொங்கிக் கொதித்ததனால் அங்கந் துடிக்கிறது
பக்கம் பதைத்துதட்டைப் பல்லுங் கடிக்கிறது
கண்கள் சிவந்தாளே [1] காந்தாள மானாளே
[2] சேஷன் மகளேகேள் [3] ஸ்ரீராமர் தங்கையேகேள்
பவளக் கொடிமாதே பாவைமின் னொளியாளே
பார்த்தீரோ படுபாவிப் பாதகன் வந்தகொள்ளை
பஞ்சவரை வனவாசம் பண்ணவைத்த துஷ்டனவன்
ஐவரைக் காடாள அனுப்புவித்த துரியனவன்
ஐவரும் மாண்டார்கள் ஆதீனம் தன்னதெனும்
நினைவு பெரிதாகி நிதானமும் இல்லாமல்
அர்ச்சுனர் தேவியராம் அரிவைமார் நம்மையெல்லாம்
அழிம்புசெய்ய வேண்டுமென்றே அரண்மனைக்கு வந்தானே
நம்மைச் சிறைபிடிக்க நாட்டுக்கு வந்தானே
மங்கைமார் கற்பழிக்க மதுரைக்கு வந்தானே
என்ன அவமானம் இருக்கிறதோ நானறியேன்
என்றுரைத்தாள் அல்லியந்த ஏந்திழைமார் எல்லாரும்
நாங்கள்,
உன்தன் அடைக்கலமா ஒன்றி யிருக்கவந்தோம்
இங்கேயும் வந்தானே ஈடழிவான் படுபாவி
என்று திகிலடைந்தார் ஏங்கிப் பயந்தார்கள்
பாண்டிவள நாடாளும் பைந்தொடியா ளதைக்கேட்டாள்
அம்மைமீர் நானிருக்க அச்சம் உமக்கேனோ
பாவைமீர் நானிருக்கப் பயமேனோ உங்களுக்குக்
கிளிமொழியீர் நானிருக்கக் கிலேசம் உமக்கேனோ
புலிபோலே நானிருக்கப் பூவைமீர் அஞ்சுவதேன்

---

1 காந்தாளம் - கடுங்கோபம்.

2 சேஷன் மகள் - நாககன்னி. 3 ஸ்ரீராமர் தங்கை - சுபத்திரை.

ஆனையின் மத்தகத்தைச் சிங்கம் பிளப்பதுபோல்
அவனுடைய சேனைகளை அடியோடு கொல்வேனே
உதிரம் புரளவைப்பேன் ஓட்டுவேன் ஊரைவிட்டு
அவனைக்,
கண்டவர்கள் தாம்நகைக்கக் காறி யுமிழவைப்பேன்
பார்த்தவர்கள் தாம்நகைக்கப் பங்கம் பெருகவைப்பேன்
அங்கம் அழுகியவன் ஆவிகள் அற்றுவிழச்
செய்கிறேன் பாருங்கள் தேர்விஜயன் தேவியரே
உபாயத்தி னாலவன்றன் உயிர்வதைசெய் யவேண்டும்
அரண்மனையிற் போயிருங்கள் அனைவோரும் எனவுரைத்தாள்
அந்தப் புரத்தினுள்ளே அனைவோரும் போயிருந்தார்
வணங்கா முடிதரித்த வாழ்வரசி யல்லியம்மாள்
உற்று நினைத்தாளே ஒருகோடி தந்திரங்கள்
தூக்கி நினைத்தாளே தொலையாத தந்திரங்கள்
அழிம்புசெய்ய வந்தவனை [1] ஆகடியம் செய்வதற்கு (இங்கு)
உபாயத்தி னாலவன்றன் உயிர்வதை செய்வதற்கு
அவனுக்கு,
ஆசைகள் காட்டுதற்கு மோசங்கள் பண்ணுதற்குப்
பின்னிடையக் கூடாது பெண்வீரங் காட்டுவம்நாம்
என்று மனதிலெண்ணி ஏந்திழையாள் பவளவல்லி
தன்னை அருகழைத்துத் தையனல்லாள் சொல்லுகின்றாள்
மாதாபோல் எனைவளர்த்த மந்திரப் பவளவல்லி
அன்னைபோல் எனைவளர்த்த அங்கனையாம் பவளவல்லி
பவளவல்லிப் பெண்மயிலே பரபரப்பா நீயோடித்
[2] துருசி யுடன்சென்று துரியன் தனைக்கண்டு
சர்ப்பக் கொடியோனைத் தையலே நீகண்டு
வந்தனங்கள் செய்தவற்கு வணங்கி முடிசாய்த்து
அவன்,
மனமும் மகிழ்வடைய மங்கையே நன்னயமாய்
மன்னவ ரேயிதற்கேன் வருத்தப் படவேண்டும்

[1] ஆகடியம் - பரியாசக்கொடுமை. [2] துருசு - துரிசி - விரைவு.

இதனா லேகவலை யேனுமக்கு நல்லவரே
ஒருத்தி தனைநாடி ஊரைவிட்டு வந்தீரே
ஆயன்தன் தங்கையின்மேல் ஆசையாய் வந்தீரே
இதனை,
அல்லி யறிந்தாளே அர்ச்சுனன் தேவியர்கள்
மெத்தமய லானார்கள் வேந்தரே உமைநினைத்தார்
எவளெவள் மேலேநீர் இஷ்டப் படுகின்றீர்
ஆறுபேர் பெண்களுக்குள் யார்மே லுமக்காசை
மின்னொளி மேலேநீர் விருப்பமா வந்தாலும்
போகவதிப் பெண்மேலே பிரியமா வந்தாலும்
[1] நாகவதிப் பெண்மேலே நாட்டமா வந்தாலும்
பவளக் கொடிமேலே பக்ஷமா வந்தாலும்
சுபத்திரை நாயகிமேல் சோகமா வந்தாலும்
அல்லியின் மேலேநீர் ஆசைகொண்டு வந்தாலும்
ஆர்மேலே ஆசையுமக் கடங்கா திருந்தாலும்
இதற்குத் தடையில்லை இதுதான் சமயமையா
கூடி விளையாடக் கொற்றவரே கிடைத்ததையா
இத்தனை பெண்டுகளில் எவளுமக்கு வேண்டுமென்று
கேளடி பெண்மயிலே கேட்டால் அவன்மயங்கி
யார்மேலே ஆசையென்று சொல்வானோ அதுதெரிந்து
விபரந் தெரிந்ததனை விளங்கவே நீயெழுதிக்
கொண்டுவா எனவுரைத்தாள் கொம்பனையாள் அல்லியம்மாள்
அப்படியே நல்லதென்றாள் அன்புடைய பவளவல்லி
மூன்றாம் படித்தளத்தில் மொய்குழலாள் வந்துநின்றாள்
வணங்கா முடிதரித்த மன்னவனைக் கண்டாளே
கண்ட வுடனவற்குத் தெண்டன் புரிந்தபின்னே
உமது விருப்பமதை உத்தமிக்கு நானுரைத்தேன்
அவளும் மகிழ்ந்தாளே அனைவோருந் தாமகிழ்ந்தார்
சொன்ன வுடன்களித்தார் தோகையர்கள் எல்லாரும்
கேட்ட வுடன்மகிழ்ந்தார் கிளிமொழியார் எல்லாரும்

1 நாகவதி - நாககன்னி.

உமக்கு,
யார்மேலே ஆசையையா அர்ச்சுனர் தேவியரில்
கேட்டுவரச் சொன்னுளே கெடிஸ்தல நாயகியும்
அறிந்துவரச் சொன்னுளே அல்லிமலர்ப் பெண்பெருமாள்
என்றுள் அதுகேட்டான் ஈடழிவான் துரியனவன்
உள்ளங் குளிர்ந்தானே உடம்புபூ ரித்தானே
ஆனந்த மானுனே அரவக் கொடியனவன்
எண்ணிவந்த எண்ணமிங்கே ஈடேறி விட்டதுநான்
நினைத்துவந்த காரியந்தான் நிலைத்துவிட்ட திவ்வுலகில்
விஜயன் மனைவியர்க்கு வேறே கணவனெவன்
என்னைவிட வேறொருவன் எங்கே இருக்கின்றுன்
இல்லையில்லை ஆகையினுல் ஏந்திழைமார் எல்லாரும்
என்மேலே ஒற்றுமையாய் இச்சைசெலுத் தினுர்கள்
என்தன்,
வசப்பட்டுப் போனுர்கள் வாள்விஜயன் தேவியர்கள்
என்று நினைத்தானே எழுந்து குதித்தானே
துள்ளி விழுந்தானே சூதன் துரியனவன்
[1] பாங்கி முகநோக்கிப் பக்குவமாய்ச் சொல்லுகிறுன்
கண்ணே நவமணியே கற்பகமே பவளவல்லி
மாதரசே நீமொழிந்த மங்கையரில் யார்மேலும்
எனக்கு,
இச்சை சிறிதுமில்லை உச்சித மங்கையவள்
மாய னுடன்பிறந்த மாதுநல்லாள் சுபத்திரைமேல்
நாரணன் தங்கையின்மேல் பூரண ஆசைகொண்டு
நெஞ்சம் தளர்கிறது நேசம் வளர்கிறது
சிந்தை கரைகிறது தேன்மொழியாள் ஆசையினுல்
அங்கம் இளைத்தறிவு மயங்குகிறேன் ஆரணங்கே
காரணஞ் சொல்லுகின்றேன் காரிகையே கேளென்றுன்

### துரியோதனன் சுபத்திரைமேலிச்சைகொண்ட காரணத்தைப் பவளசேனைக்குக் கூறுதல்

ஆதியிலே யெனக்கவளை மணம்பேசி வைத்தார்கள்
எனக்கவளை மணமுடிக்க இசைந்தார் பலராமர்

1 பாங்கி - பவளசேனை.

விவாகம் நடப்பதற்குள் வீணனந்த கோபாலன்
கிருஷ்ண னதுவறிந்து [1] கிரீடியைக் கொண்டுவந்து
யாரும் அறியாமல் அவனை உருமாற்றிச்
[2] சந்யாசி எனஅவற்குத் தனிவேஷம் போட்டுவித்துத்
திருட்டுக் கலியாணம் செய்து முடித்தானே
அன்றுமுதல் இன்றளவும் அவள்மேல் நினைவாகி
மனது மிகத்தளர்ந்தேன் எனது குறைவளர்ந்தேன்
காதல் அதிகரித்தேன் காரிகையைக் காணாமல்
இச்சை அதிகரித்தேன் ஏந்திழையைக் காணாமல்
ஆசை அதிகரித்தேன் அரிவையைக் காணாமல்
நான்,
கூட்டந் தனிலந்தக் கொம்பனையைக் கண்டாலும்
சாடையாய் நானவளைச் சந்தடியிற் பார்த்தாலும்
ஏறெடுத்துப் பாராளே என்னையந்தப் பெண்பெருமாள்
கண்ணெடுத்துப் பாராளே கட்டழகி மனமிரங்கி
எனக்கு,
ஊணுறக்க மில்லையந்த உத்தமியின் ஆசையினால்
உண்டாலும் சோறுகறி உடலிற் றரிக்கவில்லை
தின்றாலும் சோறுகறி தெவிட்டுகிற தென்னசெய்வேன்
கடித்தாலும் களிப்பாக்குக் கல்லா யிருக்கிறது
மென்றாலும் களிப்பாக்கு விறகா யிருக்கிறது
தின்றாலும் வெற்றிலையென் [3] செவ்வாய் சிவக்கவில்லை
வெற்றிலையை மென்றாலும் வெள்வாய் சிவக்கவில்லை
பாயிற் படுத்தாலும் பாம்பாய்ப் புரளுகிறேன்
மெத்தையிற் படுத்தாலும் சற்றும் உறங்கேனே
நிற்கும் இடத்திலெல்லாம் நேரிழையைக் காணுகிறேன்
பார்க்கும் இடத்திலெல்லாம் பைந்தொடியைக் காணுகிறேன்
நோக்கும் இடத்திலெல்லாம் நுண்ணிடையைக் காணுகிறேன்
காலத்தை எதிர்நோக்கிக் கவலைப் படுகின்றேன்

---

1 கிரீடி - அர்ச்சுனன். 2 சந்யாசி - சந்நியாசி.
செம்மை + வாய் = செவ்வாய் = அழகிய வாய்; திருவாய்.

இப்போது நற்காலம் ஏந்திழையாள் சுபத்திரைக்கு (இங்கு)
அர்ச்சுனன் இருந்தாலும் அவளாசை யைத்தணிப்பான்
அதோகதியாய்ப் போனார்கள் ஐவரந்த பாண்டவர்கள்
அவர்கள்,
நாடும் எனதாச்சு [1] நகரம் எனதாச்சு
வீடும் எனதாச்சு மாடும் எனதாச்சு
நாடாளும் வேந்தனென்மேல் நங்கையவள் இச்சைவைத்துக்
காடாளும் மன்னவரைக் கருத்தில் வெறுத்தென்னைச்
சேர்ந்திருக்கச் சம்மதித்தால் சீமாட்டி யாமவளைப்
பட்டத் தரசியென்று பக்கத்தில் வைத்திடுவேன்
சிங்காச னத்தில்வைத் தென்தேவி பெருந்திருவாள்
[2] அடப்பம் பிடிக்கவைப்பேன் அரிய சுபத்திரைக்கு
நாளும் சீர்மையெல்லாம் நங்கையவள் ஆண்டிருப்பாள்
என்,
சோகத்தைத் தீர்த்துவிட்டால் தொழுவேன் சுபத்திரையைத்
தாகத்தைத் தீர்த்துவிட்டால் தையலிரு கால்பிடிப்பேன்
ஆபத்தைத் தீர்த்துவிட்டால் அவட்கடிமை நானாவேன்
தாபத்தைத் தீர்த்துவிட்டால் தாஸனெனப் பணிந்திடுவேன்
நானடிமை ஆனாலென் நாடெல்லாம் அவளடிமை
நான்,
ஒருவனடி மையானால் உலகெல்லாம் அவளடிமை
மன்னனடி மையானால் வையமெல்லாம் அவளடிமை
என்ன குறைச்சலடி ஏந்திழையாள் சுபத்திரைக்குப்
பொன்னால் குறைச்சலுண்டோ பூஷணத்தால் தாழ்ச்சியுண்டோ
தனத்தால் குறைச்சலுண்டோ தானியத்தால் தாழ்ச்சியுண்டோ
ஆடை குறைச்சலுண்டோ அலங்காரம் மட்டாமோ
ஆடக் கிளிகளுடன் அம்மானை தானுமுண்டு
பேசக் கிளிகளுண்டு பிடித்தாட ஊசலுண்டு
பாடக் குயில்களுண்டு பாங்கியர்கள் மெத்தவுண்டு
கட்டிலுண்டு மெத்தையுண்டு கால்பிடிக்கத் தாதியுண்டு

---

[1] ஆச்சு = ஆயிற்று. [2] அடப்பம் - அடைப்பம் - பாக்குவெற்றிலைப்பை.

சகலவை போகமுண்டு சம்பத்து வாழ்வுமுண்டு
[1] தண்டிகைச் சேர்வையுண்டு தைய விளங்கொடிக்குப்
பேச்சுத் தவறேனே பெண்களுக்கு நாயகமே
என்று மனமுருக எடுத்துரைத்தான் மன்னனவன்
கேட்டாள் பவளவல்லி [2] கெடுதலையான் சொன்னதெல்லாம்
ஏட்டிலெழு திக்கொண்டாள் ஈடழிவான் சொன்னதெல்லாம்
ஒன்றுந் தவறாமல் ஓலையில்எ ழுதிக்கொண்டாள்
நல்லது நில்லுமையா நாகக் கொடியோரே
நீர்,
சொன்ன விஷயமிதைத் தோகையெங்கள் பெண்பெருமாள்
அல்லிமலர் நாயகிக்குச் சொல்லித் திரும்புகின்றேன்
திரும்பிவந் தும்மிடத்தில் செய்தியறி விப்பேனுன்
என்றுசொல்லித் தானடந்தாள் ஏந்திழையாள் பவளவல்லி
அவள்,
போகிறேன் என்றவுடன் பொல்லாத துரியனவன்
சொல்லாலே வசப்படுத்தித் தோகையைக் கூட்டிவைத்தால்
நல்ல பரிசுனக்கு நகைகளா நான்தருவேன்
என்றான் அதைக் [3]கேளாள் சென்றாள் பவளவல்லி

### பவளசேனை துரியோதனன் வரலாற்றை ஓலையிலெழுதி அல்லிக்குக்கொடுத்தல்

ஓட்டம் நடையுமாக ஓடிவந்தாள் பவளவல்லி
கால்நடுங்கிக் கைந்நடுங்கிக் கனிவாயில் நாவுலர்ந்து
தேக நடுநடுங்கித் தேன்மொழியாள் அவசரமாய்
அல்லியிடம் வந்துநின்றாள் அடிவணங்கித் தெண்டனிட்டாள்
வாய்திறந்து பேசுதற்கு மனது பதைக்கிறது
நாவாலே சொல்வதற்கு நடுங்குகிற தென்மனது
பாவி யுரைத்தசொல்லைப் பனைமடலில் எழுதிவந்தேன்
துரோகி யுரைத்தசொல்லைச் சுருளோலைக் குள்வரைந்தேன்

---

1 தண்டிகை - சிவிகை. 2 கெடுதலையான் - அழிவான்.
3 கேளாள் - கேளாதவளாகி; கேட்காமல்.

பாருமம்மா இவ்வோலை பாண்டிவள நாட்டாளே
என்றுரைத்தவ் வோலைதனை ஏந்திழையின் கைக்கொடுத்தாள்
அல்லிமலர்ப் பெண்ணரசி அவ்வோலை தனைவாங்கி
வாசித்துப் பார்த்தவுடன் வந்ததே கடுங்கோபம்
இதழ்கள் துடித்தனவே எழுந்ததே காந்தாளம்
கண்கள் சிவந்தனவே காய்ந்தஇருப் பூசியைப்போல்
கோபத்தை உள்ளடக்கிக் கொண்டாளே பெண்பெருமாள்
வாயால் கொழுத்தவனை மட்டடக்க வேண்டுமென்று
மதப்பட்டு வந்தவனை வதைசெய்ய வேண்டுமென்று
மந்திரப் பவளவல்லி மாது முகநோக்கி

### அல்லி, பவளசேனையிடத்தில் துரியோதனனுக்கு ஆசைசொல்ல வுரைத்தல்

அப்படியே சம்மதித்தாள் அல்லியந்த சுபத்திரையின்
மனதுகரைக் கவேண்டும் மன்னவரே அதுசெய்தால்
எத்தனை பொன்தருவீர் ஏந்திழையாள் சுபத்திரைக்குச்
சொல்லுமென்று நீகேட்டால் தோகை யிளமயிலே
ஆசை அதிகரிக்கும் அசடன் துரியனுக்கு
மோகம் அதிகரிக்கும் மூடன் துரியனுக்கு
(நான்) இத்தனை பொன்தருவேன் என்றுரைப்பான் படுபாவி
அதுதெரிந்து கொண்டபின்பு சதிகாரன் முகநோக்கி
இன்றைக்கே நீரிங்கே வரக்கூடா தாகையினால்
உமது,
பாளையத்தோ டும்முடைய பட்டணம்போய்ச் சேர்ந்தபின்பு
மூன்றுநாள் ஆனவுடன் வேந்தரே நீர்வருவீர்
வருவீர் தனியாக வந்தீரே யாமானால்
ஆரும் அறியாமல் அரசரே நீர்வந்தால்
ஒன்றி யொருவராய் உத்தமரே நீர்வந்தால்
காரியம் கைகூடும் காவலரே என்றுசொல்லி
ஆசையை உண்டாக்கி அவனை அனுப்பிவிடு
மூர்க்கன் அவனைநாம் மோசங்கள் செய்திடுவோம்
மடையன் அவனைநாம் வலையிற் பிடிப்பமென்றாள்

மோச வலைவீசி மூடனைப் பிடிப்பமென்றாள்
கேட்டாளிவ் வார்த்தைகளைக் கிளிமொழியாள் பவளவல்லி
அப்படியே நல்லதென்றாள் அரிவையவள் ஓடிவந்தாள்
மன்னவரே உம்முடைய மனதின் படியாச்சு
இறைவரே உம்முடைய இஷ்டப் படியாச்சு
எல்லாமும் உம்முடைய எண்ணப் படியாச்சு
நீர்,
கோரிவந்த காரியமும் கொற்றவரே முடிந்ததையா
முடிந்ததே காரியமும் சுபத்திரைமோ கங்கொண்டாள்
அல்லிமலர்ப் பெண்பெருமாள் அவள்மனதைத் தான்கரைத்தாள்
மனது மிகக்கரைந்து மாதுநல்லாள் வாடுகிறாள்
என்ன கொடுப்பீர்நீர் ஏந்திழைக்குப் பணையமென்றாள்
ஆனந்த மானானே அரசுமன்ன வீரனவன்
சந்தோஷ மானானே தரணிமன்னர் மன்னனவன்
எழுபதொட்டைப் பொன்தருவேன் ஏந்திழைக்குப் பணையமென்றான்
அப்படியே மன்னவரே அஸ்தினா புரந்தனக்கு
நீர்,
போயிருந்து மூன்றுதினம் பொறுத்திங்கே வாருமையா
ஆனை பரிவாரம் அடங்கலும் இல்லாமல்
ஒன்றியாய் எம்முடைய ஊருக்கு வரக்கடவீர்
என்றாள் பவளவல்லி ஈடழிவான் அதுகேட்டான்
அப்படியே நல்லதென்றான் அவளைப் புகழ்ந்தானே
நீதான்,
மெல்லியலே முடிக்க வேண்டுமிக் காரியத்தை
இந்தநன்றி எப்போதும் இளங்குயிலே நான்மறவேன்
என்றுசொல்லி யப்பாலே எழுந்து நடந்தானே
மதுரையைத் தான்கடந்து வந்துவிட்டான் பாளையத்தில்
அவனை அனுப்பிவிட்டுப் பவளவல்லி ஓடிவந்தாள்
மாதர் இளம்பிறைநேர் மங்கையல்லிப் பெண்கொடிக்கு
வந்தனம் தந்தாளே வணங்கி ஒதுங்கிநின்றாள்
தாயேநீ சொன்னதெல்லாம் தவறாமல் நான்சொன்னேன்

எழுபதொட்டைப் பொன்தருவேன் எந்திழைக்குப் பணயமென்றான்
மூன்று தினங்கழித்து வேந்தரே வாருமென்றேன்
அப்படியே நல்லதென்றான் ஆசைகொண்டு போனானே
என்றாள் அதுகேட்டாள் இலங்கிழையாள் அல்லியம்மாள்
ஆலோசனைசெய்தாள் அணிமதுரைப் பெண்ணரசி
இந்தப் படியிருந்தாள் எழின்மதுரைப் பெண்பெருமாள்

(துரியோதனன் தன் ஊருக்குப்போதல்)

அரவக் கொடிவேந்தன் அவசரமாய்த் தானடந்து
பாளையத்தில் வந்துநின்று படைவீரர் தமைநோக்கி
அடியுங்கள் ஜயபேரி அஸ்தினா புரஞ்சேரப்
பட்டணம் போவதற்குப் பாளையம் பயணமென்றான்
அடித்தார்கள் ஜயபேரி அண்டஞ் செவிடுபடப்
பிடித்தார்கள் வெண்குடையைப் பெரியகப்பற் பாய்மரம்போல்
யானையின் மேலேறி அரசன் துரியனவன்
தூரப் பயணமது தொலைதூரந் தான்கடந்து
காடு மலைகடந்து கானாறு தான்கடந்து
வனங்கள் குகைகடந்து வந்துவிட்டான் தன்தேசம்
அஸ்தினா புரமதன்றன் அருகாக வருகையிலே
ஜெயபேரி தானடித்தான் ஜெயங்கொண்டு வந்தவன்போல்
ஜெயபேரிச் சத்தமதைத் தேசத்தார் கேட்டார்கள்
அஸ்தினா புரியிலுள்ளார் அனைவருங் கேட்டார்கள்
பிரபலமாய் ஒலிக்கின்ற பேரிகையின் ஓசைதனை
எல்லாருங் கேட்டார்கள் எதிர்கொண்டு வந்தார்கள்

(கர்ணன், துரியோதனன்சேதியை வினவல்)

[1] அங்கதேசாதிபதி அவ்வொலியைத் தான்கேட்டு
ஜெயம்பெற்று வருகின்றான் தென்மதுரை போனவனும்
அவனை,
எதிர்கொள்ள வேண்டுமென்று மனதிலெண் ணிக்கொண்டு
போனவனை எதிர்காணப் புறப்பட்டான் கர்ணனவன்
வந்தெதிர் கொண்டானே மார்போடு தானணைத்தான்

---

1 அங்கதேசாதிபதி - கர்ணன்.

கட்டித்த ழுவிக்கொண்டான் [1] காடாலிங் கனஞ்செய்தான்
கூடிக்கு லவினார்கள் கொற்றவர்கள் சந்தடியாய்ப்
பட்டணத்துள் ளேயந்தப் பார்த்திபர் வந்தார்கள்
அவரவரைக் கையமர்த்தி அவரவர் மாளிகைக்கு
விடைகொடுத் தனுப்பிவிட்டு வேந்தனும் கர்ணனுமாய்ச்
சிங்கார மேடையின்மேல் சேரக் கொலுவிருந்தார்
அவரவர் ஆசனத்தில் அவரவர் இருக்கையிலே
துரியோ தனன்தனது தோழன் முகநோக்கி
சீர்மைகளெல் லாஞ்சிறப் பாயிருக் கின்றனவா
மன்னர்க ளெல்லாரும் மகிழ்ந் திருக் கின்றாரா
என்றுவி னவினானே எழில்நாகக் கொடிவேந்தன்
கொடையிற் சிறந்தகர்ணன் கொற்றவன் முகநோக்கி
சீர்மைகளெல் லாஞ்சிறப் பாயிருக் கின்றனமா
மன்னர்க ளெல்லாரும் மகிழ்ந் திருக் கின்றார்கள்
தாங்கள்,
மதுரைக்குச் சென்றசெய்தி மன்னவரே உரையுமென்றான்
காயோ பழமோஅக் காரியத்தைச் சொல்லுமென்றான்
போய்வந்த காரியத்தின் புதுமையைச் சொல்லுமென்றான்
நடந்தவோ காரியங்கள் நலமா யிருந்தனவோ
ஆனவோ காரியங்கள் அழகா யிருந்தனவோ
எப்படி முடிந்தனவோ எனக்கறியச் சொல்லுமென்றான்
ஆலித்துத் தன்மனது பூரித்தான் துரியனவன்
பொங்கு கடல்போலே போர்வேந்தன் பூரித்தான்
கர்ணரே கேளுமையா கெடியான சேதிதனை
நான்போன காரியமும் நடக்கா திருப்பதுண்டோ
தென்மதுரைப் பட்டணத்தைத் தேடியே போனேனே
பட்டணத்துக் குள்ளேநான் பாங்குடனே நுழைகையிலே
மாதர்க ளெல்லாரும் மகிழ்ந்தென்னை வரவழைத்தார்
பூவையர்க ளெல்லாரும் புகழ்ந்தென்னை வரவழைத்தார்
அரிவையர்கள் என்னைமிக அன்பாக வரவழைத்தார்

1 காடம் + ஆலிங்கனம் = காடாலிங்கனம் - இறுகத்தழுவுதல்.

எங்குவந்தீர் எனக்கேட்டார் ஏந்திழைமார் எல்லாரும்
சுபத்திரைமேல் ஆசைகொண்டு தோகையரே வந்தெனென்றேன்
அவ்வார்த்தை கேட்டவுடன் சம்மதித்தார் எல்லாரும்
எல்லாரும் ஒருமனதாய் எனைவிரும்பி யிருந்தார்கள்
மூன்றுநாள் சென்றபின்பு மொய்குழலை நான்பெறுவேன்
இதற்குப் பயந்தீரே என்னுடைய அண்ணாவே
என்றான் மனமகிழ்ந்தான் இஷ்டம்போற் கெடுவழியிற்
சென்றான் மனங்குன்றான் திரியோ திரனிருந்தான்

### கர்ணன் துரியோதனனுக்கு அல்லியினுடைய உள்ளெண்ணத்தைச் சொன்னது

அவ்வார்த்தை கேட்டவுடன் அங்கதே சாதிபதி
உற்று நினைத்தாரே ஒருகோடி புத்திகளை
ஆண்டு நினைத்தாரே அளவற்ற புத்திகளை
என்ன [1] அவகேடோ எழிலான மன்னவனே
சூது நினைப்பாளே தொன்மதுரை நாட்டாளும்
கவடு நினைப்பாளே கனமதுரை நாட்டாளும்
வசப்படுவாள் என்றுமது மனதிலே எண்ணாதீர்
சிக்கினாள் என்றுமது சிந்தையிலே எண்ணாதீர்
உம்மை,
பங்கப் படுத்திடுவாள் பலபேர் நகைக்கவைப்பாள்
உமது,
சரீரம் அழித்திடுவாள் சபையோர் சிரிக்கவைப்பாள்
அங்கம் குலைத்திடுவாள் அவனியோர் சிரிக்கவைப்பாள்
வாதனையும் வேதனையும் வருத்தமும் வந்துவிடும்
கண்டார் நகைப்பார்கள் கனங்குலைந்து போய்விடுவீர்
அவளுடைய சேதியைநீர் அறியீரே மன்னவரே
ஆங்கார நீலியவள் அடங்காள் ஒருவருக்கும்
மட்டு மிதம்பாராள் மரியாதை வையாளே
அங்கு,
இதற்குள்ளே யோசனைஎன் னென்னசெய் கின்றாளோ
சொன்னாலும் நீர்கேளீர் தோகையின் சேதிதனை

---

1 அவகேடு=மிகுகேடு.

கடல்கலங்கிப் போனாலும் கலங்கா தவள்மனது
சூரியன் இருண்டாலும் சுருங்கா தவள்மனது
நெருப்பு குளிர்ந்தாலும் நில்லா தவள்மனது
இந்த,
அண்டம் புரண்டாலும் அசையா தவள்மனது
கோடை,
இடிக ளிடித்தாலும் இளகா தவள்மனது
போனால் தெரியுமந்த பொன்விளைந்த தென்மதுரை
இனி,
வருவ தறிந்துசொன்னேன் மாநாகக் கொடிவேந்தே
அப்பால் உமதுமனம் எப்படியோ நானறியேன்
என்றான் அதுகேட்டான் ஈடழிவான் படுபாவி
சிவுக்கென் றெழுந்தானே தீநாகக் கொடியனவன்
கர்ணனைத் தான்பார்த்துக் கடுகடுத்துச் சொல்லுகிறான்
நான்,
உள்ளத்தைச் சொன்னக்கால் உறுதியென் றெண்ணாமல்
ஏதோ பயமுறுத்தி என்னை மிரட்டுகிறீர்
கள்ளங் கவடிருந்தால் காரணந் தெரியாதா
சூது கவடிருந்தால் தோன்றாதோ என்றனுக்கு
மோசம் பிசகிருந்தால் முந்தியே தெரியாதா
அத்தனை தெரியாதா அரசாளும் என்றனக்கு
நாளை தெரியவரும் நான்கொண்ட [1] கெம்பீரம்
கண்ணாலே பார்ப்பீர்நீர் கர்ணரே அண்ணாவே
பண்ணாத யோசனைகள் ஏனோநீர் பண்ணுகிறீர்

### துரியோதனன், தன்மனைவியிடஞ் சென்றது

என்று,
கர்ண னிடமிருந்து காரிகை அரண்மனைக்குப்
பெருந்திருவாள் அரண்மனைக்குப் போரசன் போனானே
மாது பெருந்திருவாள் மயிலனையாள் தானெழுந்து
வந்தமுடி மன்னனுக்கு வணங்கியே தெண்டனிட்டாள்
எவ்விடத்திற் போயிருந்தீர் எனக்கறியச் சொல்லுமென்றாள்

1 கெம்பீரம் = புகழ்.

அவ்வசனங் கேட்டவுடன் அரசனவன் ஏதுசொல்வான்
கண்ணே நவமணியே கற்புள்ள பெண்கொடியே
பெண்கள் சிகாமணியே பெண்களுக்கு நாயகமே
மாது சுபத்திரைமேல் மையலாய்ப் போனேனே
அரிவை சுபத்திரைமேல் ஆசைகொண்டு போனேனே
போன இடத்தினிலே பொற்கொடியென் வசமானாள்
அல்லியுஞ் சம்மதித்தாள் அவளுமு ருகினாளே
அல்லி மனமுருகி [1] அவளும் வசமானாள்
மூன்று தினக்கெடுவு மொய்குழலும் வைத்தாளே
அதற்குள்,
எனது நினைவைப்போல் எல்லா முடிந்துவிடும்
கலக்கங்க ளில்லையடி கன்னி யிளமயிலே

## பெருந்திருவாள், துரியோதனனுக்கு, அருச்சுனன் தேவிகளுடைய உள்ளக்கருத்தை உரைத்தல்

கேட்டாள் இதனைக் கிளிமொழியாள் பெருந்திருவாள்
என்ன அவகேடோ ஏந்திழையாள் சம்மதித்தாள்
ஏதோ அபகீர்த்தி இருக்கிறது மன்னவரே
மாய வலையதனில் மயங்கியகப் பட்டீர்நீர்
ஆசைவலைப் பட்டதனால் அலைந்து திரிகின்றீர்
பெண்களின் [2]சாகசத்தைப் புருஷர்கள் தாமறியார்
நீராழங் கண்டாலும் நெஞ்சாழங் காண்பதுண்டோ
அல்லியின் சம்மதமோர் அதிசயமா யிருக்கிறது
சுபத்திரையின் சம்மதமும் சூதா யிருக்கிறது
பத்தினிப் பெண்களந்தப் பார்த்தன்தன் தேவியர்க்குள்
சரசுவதிக் கொப்பான தையனல்லாள் சுபத்திரையை
அனுசரித்துப் போவாரை அனலா யெரித்திடுவாள்
அல்லியோ கடுஞ்சூலி ஆங்காரக் கொடுநீலி
மெய்யென்று நம்பிவிட்டீர் வீணாசை கொண்டீரோ
பொய்யான வாழ்வதனை மெய்யாயெண் ணினீரோ
ஆறுமக் கருகிருக்கக் குளத்துநீ ராடலாமோ

---

1 அவள் = சுபத்திரை. 2 சாகசம் = கொடுமை, பகை.

கிட்டத்தில் ஆறிருக்கக் கேணிநீ ருடலாமோ
அன்னியர் பெண்களின்மேல் ஆசைப் படலாமோ
விஜையன் மனைவியன்றி வேறொருத்தி யாகாதோ
போர்மன்னன் தேவியன்றிப் பின்னொருத்தி யாகாதோ
அர்ச்சுனன் தேவியன்றி அயலொருத்தி யாகாதோ
மன்னரந்த பாண்டவர்கள் வனவாசம் போனாரே
ஆரிழைமா ரெல்லாரும் அறைக்காவ லானாரே
மெல்லி திரௌபதியும் [1] வெங்கானல் போனாளே
கோதை திரௌபதியும் கூந்தல் விரித்தாளே
தோகை யிளமயிலைத் [2] துயிலுங் களைந்தீரே
ஆரியர் சபைநடுவே அம்பலவர் தமக்குமுன்னே
சொல்லாத வார்த்தைசொல்லித் துயிலுங் களைந்தீரே
அப்போ தவளழுது நின்றாள் சபைநடுவே
வேந்தர் சபைநடுவே மெல்லி புலம்பிநின்றாள்
மன்னர் சபைநடுவே மாது புலம்பிநின்றாள்
அரசர் சபைநடுவே அரிவை புலம்பிநின்றாள்
ஆயன் அவள்துணையாய் அபிமானங் காத்தானே
மாயன் அவள்துணையாய் மானத்தைக் காத்தானே
கண்ணன் அவள்துணையாய்க் கற்பை வளர்த்தானே
அன்றேயெ னதுதாலி அறுந்துவிட்ட தென்றிருந்தேன்
இன்னும் அதையிழக்க மன்னவரே நினைத்தீரோ
பூவி லவதரித்த பொற்கொடியா ளல்லியம்மாள்
மலரிற் பிறந்ததொரு மாதல்லிப் பெண்பெருமாள்
அவள்,
வயிற்றிற் பிறக்கவில்லை வன்கொடுமை செய்ததில்லை
குடலிற் பிறக்கவில்லை குலக்கொடுமை செய்யவில்லை
அல்லிக் கொடிமேலே அவதரித்த பெண்ணரசி
ஐந்து வயதினிலே அறியாத நாளையிலே
எண்ணெய்த் தலையுடனே எதிர்த்துவந்த நின்முகனைக்

---

1 வெங்கானல்=வெம்மை+கானல்=கடுங்காடு.

2 துயில்=துகில்=சேலை.

கொன்றுபட் டந்தரிக்கக் கூசாத நீலியவள்
பெண்பட்டந் தரித்ததனால் பேருலகை ஆளுகிறாள்
ஆணாய்ப் பிறவாமல் அரைநாண் தரியாமல்
மாலை முடியாமல் மதுரையெல்லாம் ஆளுகிறாள்
மன்னா நீ வாவென்று வரவழைப்பாள் உம்மையவள்
அறையில் அடைப்பாளே ஆக்கினைகள் செய்வாளே
கோலங்கள் காட்டியும்மை குத்துவாள் வெட்டிவைப்பாள்
வேண்டாம் அவளாசை வெறுத்துவிடும் வெறுத்துவிடும்
அங்கே,
போனால் தெரியுமந்த பூவையின் வீரியங்கள்
நான்சொல்லும் முறைமைகளை நாயகரே சொல்லிவிட்டேன்
1 வீட்டாளி சொற்கடந்து வெறுத்துவிட்டு நீர்போனால்
மனையாட்டி வார்த்தைகளை மறுத்துவிட்டு நீர்போனால்
பெண்டாட்டி சொல்லுகளைப் பிழையென்று நீர்போனால்
மறுவசனஞ் சொல்லவென்னால் ஆகாது மன்னவரே
என்றுதன்னா லானமட்டும் எடுத்துரைத்தாள் மாதேவி
கவடுள்ள கணவனுக்குக் காதில் நுழையாமல்
செவிடன் செவிகளிலே ஊதின சங்கேபோல்
கருங்கல்லின் மேலாணி அடித்த விதமேபோல்
மனைவி உரைத்ததெல்லாம் மாறாய் இருந்தனவே
பெண்சாதி சொன்னதெல்லாம் பிசகா யிருந்தனவே
அவள்,
சொன்ன மதிகளெல்லாம் சூதாயிருந்தனவே
விளக்கருமை குருடனுக்கு விளங்கா விதம்போல
நன்மதிகள் எல்லாமும் துன்மதிகள் ஆயினவே
இத்தனை மதிகளுக்கும் இசையாமல் துரியனுந்தான்
மாய மயக்கமவன் மண்டையிலே ஏறியதால்
அவ்வார்த்தை தப்பவிட்டு நுழைந்தா னவன்வீட்டில்
சப்பிர கூடமஞ்சத் தழுவணையில் சாய்ந்தானே
பஞ்சணை மெத்தையின்மேல் பாம்பாய்ப் புரண்டானே

1 வீட்டாளி=மனையாள்.

அன்னம் அருந்தானே அனந்தல் பொருந்தானே
ஆரோடும் பேசானே அரிவையின் நினைவதனால்
இந்த விதமாக மூன்றுநா ளிரவுபகல்
வருந்திக் கழித்தானே மாநாகக் கொடிவேந்தன்

### அல்லியரசி, தச்சர்களை அழைத்துவரச்சொன்னது

அப்பாலே நடந்த அதிசயத்தைச் சொல்லுகிறேன்
சங்கத் தமிழ்வளர்ந்த தனிமதுரைப் பட்டணத்தில்
தெய்வத் தமிழ்வளர்ந்த தென்மதுரைப் பட்டணத்தில்
ஆதித் தமிழிருந்த அணிமதுரைப் பட்டணத்தில்
அணிமதுரைப் பட்டணத்தில் அல்லிமலர்ப் பெண்பெருமாள்
நாகக் கொடிவேந்தன் நாட்டுக்குப் போனபின்பு
பண்ணாத யோசனைகள் பண்ணினாள் பெண்களுடன்
அர்ச்சுனன் தேவியாம் அரிவையர்க ளுடனிருந்து
மதுரைத் துரைச்சியிள மயிலனையாள் அல்லியம்மாள்
எப்படி யென்னசெய்வோம் ஈடழிவான் வருவானே
ஆசையாய் வருவானே அரவக் கொடியனவன்
மந்திரப் பவளவல்லி மாதரசே கேளாய்நீ
**அவன்,—**
வருவதற்கு முன்னேநாம் வஞ்சனைகள் செய்வதற்கு
வளமதுரைப் பட்டணத்தில் வாழ்கின்ற தச்சரவர்
ஏழுபேர் உடன்பிறந்தார் இணையில்லாச் சிற்பருஞ்
சூஸ்திர மறிந்தவர்கள் துணைவர் எழுவருந்தாம்
சாஸ்திர மறிந்தவர்கள் சகோதரர் எழுவருமே
சிற்பநூல் அறிந்தவர்கள் ஜெகத்குரு [1] கண்ணாளர்
கண்ணாளர் எழுவருந்தாம் கப்பலொன்று செய்தார்கள்
ஏழுபேர் தச்சரெனக் குக்கப்பல் செய்தார்கள்
அவர்களை இப்பொழுதே நீகண்டு தேன்மொழியே
ஒன்றும் உரையாமல் உட்கருத்தைச் சொல்லாமல்
நான்வரச் சொல்லியதாய் நாடி யவர்க்குரைப்பாய்

---

[1] கண்ணாளர்=கம்மாளர்.

வேறொன்றுஞ் சொல்லாமல் விஷயத்தைக் கூறாமல்
மற்றொன்றுஞ் சொல்லாமல் வயணத்தைக் கூறாமல்
என்னவோ காரணத்தால் பயணமாய் இக்கணமே
உங்களைச்,
சீக்கிரம் வரச்சொன்னாள் தென்மதுரை நாடுடையாள்
கடுக வரச்சொன்னாள் கடிமதுரை நாடுடையாள்
அவசரமாய் வரச்சொன்னாள் அணிமதுரை நாடுடையாள்
நீர்,
தங்கித் தரியாமல் தாமதஞ் செய்யாமல்
நின்று நிலைக்காமல் நிமிஷத்தில் வரவேண்டும்
என்றுரைத்தால் கம்மாளர் எழுவரும் தம்முடைய
மனதிற் பயமிருந்து வருவார்கள் தென்மதுரை
அவர்கள்,
வருவதற் குள்ளேநீ வரவேண்டும் சேதிசொல்ல
என்றாள் அதுகேட்டாள் எழுந்து நடந்தாளே
அப்படியே நல்லதென்றாள் அணியிழையாள் பவளவல்லி
வாலை வயதுடையாள் மங்கை இளங்கொடியாள்
அருந்ததிக் கற்புடையாள் அழகு மிகவுடையாள்
அன்ன நடையுடையாள் அவசரமாய் வெளியானாள்
ஆசார வாசலைவிட் டரண்மனையுந் தான்கடந்து
கோட்டை கடந்து கொத்தளமுந் தான்கடந்து
கொடிமதுரை நகர்தாண்டிக் கொம்பனையாள் நடந்தாளே
மதுரை நகர்கடந்து வழிபிடித்து நடந்தாளே
[1] துருசியாய் நடந்தாளே தோகை மயில்போலே
கடுக நடந்தாளே கான மயில்போலே
வெய்யிலுக்கு முன்னேதான் வீசி நடந்தாளே
கானலுக்கு முன்னேதான் கடுக நடந்தாளே
விசையுடனே தானடந்து மெல்லியலாள் அப்போது
மதுரைக்கு வடதுபக்கம் வந்துவிட்டாள் பவளவல்லி
தெத்துக் கடந்தாளே தெருவும் பலகடந்தாள்

---

1 துருசி=சீக்கிரம்.

மன்னர் தெருவுகளும் மாடவீ தியுந்தாண்டி
தென்னர் தெருவுகளும் தேரோடும் வீதிகளும்
ஆனை விலைமதிக்கும் அரசர் தெருவுகளும்
குதிரை விலைமதிக்கும் கோவேந்தர் வீதிகளும்
தங்கு தடையின்றி சகலவீ தியுங்கடந்து
தச்சர்கள் வீதியிலே தையனல்லாள் வந்துநின்றாள்
அல்லியம்மாள் சொல்லிவிட்ட அடையாளம் தான்பிடித்துச்
சிற்பநூல் வல்லவராம் ஜெகத்குரு கண்ணாளர்
தச்சர்கள் தம்வீட்டின் தலைவாசற் படியேறி
அவர்களை அவசரமாய் அரிவை அழைத்தாளே
துருசியாய் அழைத்தாளே தோகை யிளங்கொடியாள்
ஆரம்மா என்றார்கள் அவர்கள் எழுவர்களும்
கூப்பிட்ட குரல்கேட்டுக் கொப்பெனவே ஓடிவந்தார்
மந்திரப் பவளவல்லி மங்கையைக் கண்டார்கள்
என்ன அவசரமோ இத்தனைதூ ரம்வந்தாய்
மதுரைத் துரைச்சியின்தன் மந்திரத் தொழிற்குரிய
அதிகாரி யாய்விளங்கும் அரிவைநீ வந்ததென்ன
வந்ததொரு காரியத்தை வகையாக உரைத்திடுவாய்
என்று மனமுவந்து எதிர்வந்து கைதொழுதே
அழகுமுகம் வேறுபட அவசரமாய் வந்ததென்ன
முகங்கள் மிகக்கருகி முத்தான வேர்வைசிந்த
இத்தனை தூரம்வந்த காரணம்தெ ரியவேண்டும்
எங்களை அழைக்கவந்த காரியம் இப்போது
எத்தனை அவசரமாய் இருந்தாலும் என்னவம்மா
தாதிமார் பலரிருக்கத் தையல்நீ வருவானேன்
வந்த அவசரத்தை வாய்திறந்து சொல்லென்றார்
அவ்வார்த்தை கேட்டவுடன் அரிவை பவளவல்லி
கண்ணாளரே கேளீர் கடிமதுரை அல்லியம்மாள்
ஏதோ அவசரமாய் உங்கள் எழுவரையும்
உடன்பிறந்தார் எழுவரையும் உடனே வரச்சொன்னாள்
கடுகவரச் சொன்னாளே கடிமதுரை அல்லியம்மாள்

வரச்சொன்ன காரியத்தின் வகையின்ன தென்றறியேன்
அல்லியம்மாள் உட்கருத்தை அறிவிக்க வில்லையென்றாள்
மற்றொன்றும் நானறியேன் வகையறிந்து சொல்வதற்கு
வருவீரோ நீரென்றாள் மந்திரப் பவளவல்லி
தாமதம் செய்யாமல் சடுதியில் வாருமென்றாள்
திடுக்கிட்டுத் தச்சரெல்லாம் தெளிவில்லா மனமுடனே
அஞ்சி நடுநடுங்கி அப்படியே ஆகவென்றார்
அவள்,
சீக்கிரமா வாருங்கள் முன்னேநான் செலவனென்றாள்
அம்மாவுன் பின்நாங்கள் அவஸியம் வருகின்றோம்
என்றார்கள் தச்சர்கள் ஏந்திழையாள் பவளவல்லி
வந்த வழியைவிட்டு மறுவழியைத் தான்பிடித்துத்
துருசியாய் நடந்தாளே தொன்மதுரை நகர்நோக்கி
நிற்கத் தரியாமல் நிலத்திற்கால் பாவாமல்
பிடித்தாளே ஓரோட்டம் பெண்மதுரை வந்துவிட்டாள்
மதுரைநகர் சேர்ந்து மயிலனையாள் தன்கொலுவில்
கொலுமுகத்தில் வந்துநின்று கொம்பனையைத் தெண்டனிட்டுத்
தான்,
போய்வந்த சங்கதியும் தச்சரைப் பொருத்தமுடன்
கண்டதுவும் அவர்களுக்குக் காரியத்தைச் சொல்லாமல்
உடனே வருகவென்று உத்தரவு செய்ததுவும்
அதற்கவர்கள் ஒப்பினதும் அடங்கலும் சொல்லிவிட்டாள்
அல்லிமலர் நாயகியும் அதிக மனமகிழ்ந்து
சந்தோஷ மாகியந்தத் தையலைக் கொண்டாடித்
தன்னருகி லிருக்கவைத்துச் சன்மானஞ் செய்தாளே
உடனாக இருக்கவைத்தே உபசாரஞ் செய்தாளே
இப்படி யிங்கிருக்க ஏழுபேர் தச்சர்களும்

### தச்சர், தாஞ்செய்துதந்த கப்பல்உடைந்ததென்றெண்ணுதல்

ஒருநாளும் இல்லாமல் உலகாளுங் கன்னியவள்
அவசரமாய் வரச்சொன்ன அதிசயத்தை நாமறியோம்

---

1 சன்மானம்=உபசாரம்.

இது,
மருமமாய் இருக்கிறது மனது துடிக்கிறது
முன்னொரு கப்பலைநாம் செய்து முடித்தோமே
செய்துதந்த கப்பலிலே [1]தீம்புவந்து நேர்ந்ததுவோ
கடையாணி கழன்றதுவோ கப்பல் உடைந்ததுவோ
கப்பல் உடைந்தவிதம் எப்படியோ நாமறியோம்
போனால் வருவோமோ பிழைமோசம் ஆய்விடுமோ
மருமந் தெரியவில்லை கருமந் தொலையவில்லை
போனால் விடமாட்டாள் பலியிடுவாள் நம்மையெல்லாம்
தப்பி வருவதில்லை தனிமதுரை நாம்போனால்
பிழைத்து வருவதில்லை பேர்மதுரை நாம்போனால்
வீட்டாசை விடவேண்டும் காட்டாசைப் படவேண்டும்
மனையாசை விடவேண்டும் வனத்தாசைப் படவேண்டும்
என்று பலவிதமாய் எண்ணி யெண்ணித் தங்களுக்குள்
பேசி மிகவருந்திப் பிரியமுள்ள மனைவியரைத்
தங்கள்தங்கள் மனைவியரைத் தாமழைத்துச் சொல்லுகின்றார்
இனியெங்கள் ஆசைகளை ஏந்திழைமீர் மறந்திடுங்கள்
பிழைக்கும் வகையறிந்து பிழையுங்கள் மனைவிகளே
நாங்கள்,
பிழைத்தோமே யாமானால் பெருமையாய் வந்திடுவோம்
மக்களைத் தாமழைத்து வருத்த மதிகரித்துக்
கட்டி அழுதார்கள் கண்ணீர் விடுத்தார்கள்
முட்டி அழுதார்கள் முகத்தி லறைந்துகொண்டார்
இவ்வளவே கண்டபலன் என்று மனங்கலங்கி
ஒருவ ருடனொருவர் உவமைசொல்லித் தாமழுதார்
பாடி அழுதார்கள் பாதவித்து நின்றார்கள்

## தச்சர்கள் மதுரைக்கு வருதல்

ஆசை களைவெறுத்தார் அருந்தச்சர் எழுவருந்தாம்
இச்சை களைவெறுத்தார் தச்சர்கள் எழுவருந்தாம்

---

[1] தீம்பு=கெடுதி.

காதல் ஒழித்தார்கள் கம்மாளர் எழுவருந்தாம்
சிற்றுளி தாமெடுத்துச் சிறுவாய்ச்சி தோளில்வைத்துத்
தென்மதுரைப் பட்டணத்தைத் தேடியே வருகின்றார்
[1] பூவாசி தனைத்தேடிப் புலம்பி வருகின்றார்
[2] வாழ்வாசி தனைத்தேடி வருந்தி வருகின்றார்
அல்லி தனைத்தேடி அழுது வருகின்றார்
கடிமதுரை தனைத்தேடிக் கால்நடுங்கி வருகின்றார்
பஞ்சபூ[3] தங்கலங்கிப் பயந்து வருகின்றார்
தத்தடி யிட்டுக்கொண்டு தள்ளாடித் தாநடந்து
தென்மதுரைக் குள்நுழைந்து சிந்தை மிகக்கலங்கி

## தச்சர்கள் அல்லிஅரசியைக்கண்டது

மதுரை நகர்புகுந்து மெத்தத் திகிலடைந்து
கோட்டை தனைக்கடந்து கொத்தளமுந் தாந்தாண்டி
கொலுமேடை தனைத்தேடிக் குலைகள் நடுநடுங்கி
வருகிற வேளையிலே எதிர்கண்ட தாதியர்கள்
ஓடோடி வந்தார்கள் உத்தமிக்குத் தெண்டனிட்டார்
அல்லிமலர் நாயகியே அணிமதுரை நாட்டாளே
தச்சர்கள் வந்தார்கள் தாயேசிங் காதனத்தில்
ஏறிக் கொலுவிருக்க இப்போதே வருவாய்நீ
உன்,
கொலுவண்டை வந்தார்கள் ஏழுபேர்தச் சர்களும்
என்றார் அதுகேட்டாள் எழுந்திருந்தாள் அல்லியம்மாள்
பெண்கள் புடைசூழப் பேரிகை முழங்கிவரத்
தங்கக் கொலுவதனில் மங்கையவள் வந்தமர்ந்தாள்
சிங்கா தனத்தின்மேல் தேன்மொழியும் வீற்றிருந்தாள்
தச்சர் மிகப்பயந்து சாஷ்டாங்க தெண்டனிட்டார்
மெத்தப் பயந்தவர்கள் மெல்லியற்குத் தெண்டனிட்டார்
பயந்துநின்ற தச்சரையப் பட்டத் தரசிகண்டாள்

---

[1] பூவாசி=[2] வாழ்வாசி=அல்லி.
3 பஞ்சபூதம்=ஐவகை ஆத்மா, அல்லது உயிர்.

### அல்லி, தச்சர்களுக்குத் தேறுதல்சொல்லுதல்

பயப்படவேண் டாமென்று பரிவுடன் அவர்களுக்குத்
தேறுதல் சொன்னளே தேன்மொழியாள் அல்லியம்மாள்
உங்களால் என்றனக்கோர் காரியமா கவேண்டும்
ஆபத்து வந்ததனுல் அவசரமாய் உமையழைத்தேன்
அத்தனை உபகாரம் அன்புடனே நீர்செய்தால்
வேண்டும் பொருளுமக்கு வெகுமானஞ் செய்வனென்ருள்
நல்ல வெகுமானம் நான்தருவேன் உமக்கென்ருள்
கேட்டார்கள் கம்மாளர் கிளிமொழியாள் வார்த்தைகளை
அறிந்தார்கள் கம்மாளர் அல்லியின் வார்த்தைகளைத்
தெரிந்தார்கள் கம்மாளர் தேன்மொழியாள் வார்த்தைகளை
இன்று பிழைத்தோம்நாம் ஈடேறி விட்டமென்ருர்
தப்பிப் பிழைத்தோமே தலைதப்பி வாழ்ந்தமென்ருர்
எங்களா லாகின்ற ஏவல் எதுவம்மா
அடிமைகளா லாகின்ற அலுவ லெதுவம்மா
தயவுடன்சொல் லவேண்டும் தாயே யெனத்தொழுதார்
வாய்திறந்து சொல்லுமெங்கள் மாதாவே எனத்தொழுதார்

### அல்லி தச்சர்களை ஏணி செய்யச் சொன்னது

மதுரைத் துரைச்சியந்த மயிலனையாள் அல்லியம்மாள்
தயவுட னேயெழுவர் தச்சர் தமைநோக்கி
ஏணியொன்று செய்யவும்மை இவ்விடத்தில் நானழைத்தேன்
ஆகாய ஏணிசெய்ய வேண்டும் அதிசயமாய்ச்
சூரியமண் டலத்தில்சு ழலவேண்டும் அவ்வேணி
காலால் உதைகொடுத்தால் கடுகளழும் பவேண்டும்
அந்தரத்தில் அவ்வேணி அதிசயமாய்த் தான்பறக்க
ஒன்பதி ரத்தினத்தால் ஒளிகள் பளபளென்னப்
பத்துப்ப டிகளதில்ப திக்கவேண்டும் இரத்தினத்தால்
முத்துப் படியொன்றும் முழுகெம்புப் படியொன்றும்
பவளப் படியொன்றும் நீலப் படியொன்றும்
மாணிக்கப் படியொன்றும் மரகதப் படியொன்றும்

ஆணிப்பொன் ஞற்செய்த அழகான படியொன்றும்
புஷ்பரா கம்பதித்த புதிய படியொன்றும்
வயிர மிழைத்துவைத்த வண்ணப் படியொன்றும்
கோமே தகமிழைத்த கோதில் படியொன்றும்
ஒவ்வொரு படியதனில் ஒவ்வொரு மங்கையையும்
அந்தந்தப் படியதனில் அவளவளைப் போலெழுதிப்
பத்தாம் படியதனில் பாவையந்த சுபத்திரைபோல்
எழுதியிருக் கவேண்டும் ஏறினுர் உடலிலுள்ள
பக்கம் பதினறு [1] பழுவெலும்பு முறிப்பதற்குக்
கீலுக்குக் கீலாணி கெட்டியாய்த் தைத்தவுடன்
உள்ளங்கால் வசியேறி உச்சியிற்பா யவேண்டும்
கபாலந் திறந்திரண்டு கண்கள் முழிபிதுங்கி
விசையேணி முறுக்கிவிட்டால் மேலே விரைந்தெழும்பிக்
காற்ருடி போலந்தக் கனவேணி அந்தரத்திற்
பறந்து வரவேண்டும் பாரிலுள்ள நாடுகளில்
கண்டார்கள் தாஞ்சிரித்துக் காறியு மிழவேண்டும்
அதனைக்,
காலாலே தட்டிவிட்டால் காற்றைப்போ லேயெழும்பிக்
கையாலே தட்டிவிட்டால் மண்ணிற்ப தியவேண்டும்
போவென்ருற் போவதற்கு நில்லென்ருல் நிற்பதற்கே
இப்படிச் சூஸ்திரமா ஏணியைச் செய்தால்நீர்
வேண்டும் வெகுமானம் மிகுதியாய் நான்தருவேன்
சீக்கிரமா கவேண்டும் சிற்பநூல் வல்லவரே
ஆகுமோ எனக்கேட்டாள் அதற்கந்த கம்மாளர்
அப்போதெ மூவர்களும் ஆலோ சனைசெய்தார்

## தச்சர்கள் அல்லிக்கு ஏணிசெய்தது

ஒப்பினுர் அக்ஷணத்தில் ஒன்ருய்க்கூ டிநன்ருய்ச்
செய்தார்கள் ஏணியொன்று சீக்கிரமாய்த் தச்சருந்தாம்
ஆகாய ஏணியொன்றை அந்தமாய்ச் செய்தார்கள்

[1] பழுவெலும்பு = விலாவெலும்பு.

சூஸ்திர ஏணியொன்று சுழலேணி செய்தார்கள்
மந்திர ஏணியொன்று மாவேணி செய்தார்கள்
தந்திர ஏணியொன்று [1]சரவேணி செய்தார்கள்
அந்தர ஏணியொன்றை அதிசயமாய்ச் செய்தார்கள்
ஒவ்வொரு படியினிலும் ஒவ்வொரு மங்கையைப்போல்
ஒன்பது பதுமைகளை ஒன்பது மணியிழைத்துப்
புதுமையாய்ச் செய்தார்கள் புத்தியுள்ள கம்மாளர்
நாககன்னி யொருபடியில் [1]இராஜகன்னி யொருபடியில்
ஏலகன்னி யொருபடியில் போகவதி யொருபடியில்
பவளகன்னி யொருபடியில் மின்னொளியாள் ஒருபடியில்
அந்தந்தப் படியதனில் அதிசயமாய்ச் செய்துவைத்துப்
பத்தாம் படியினிலே பாவையந்தச் சுபத்திரைபோல்
பதுமையைச் செய்துவைத்த புதுமையை என்னசொல்வேன்
[2] பரியவசி நட்டுவைத்தார் பக்கவசி நட்டார்கள்
காலாணி கையாணி கழற்றாணி தைக்கவைத்தார்
சூஸ்திரங்கள் செய்தார்கள் சுழலேணி முடித்தார்கள்
இருந்த இடத்திலிருந் தேணியை முறுக்கிவிட்டால்
பறக்குமே அந்தரத்திற் [3]பட்டம் பறப்பதுபோல்
போவென்று விட்டவிடம் போகுமந்த சுழலேணி
கண்டவர்கள் உளவறிந்து காலாலே தட்டிவிட்டால்
காற்றைப்போல் மேலெழும்பிக் கடிமதுரை வந்துவிடும்
அவ்வேணி,
செய்து முடிந்தசெய்தி திறமையுள்ள கம்மாளர்
அல்லிமலர்ப் பெண்கொடிக்குத் தெரிவித்தார் அவசரமாய்
அல்லி யரசியுடன் அர்ச்சுனன் தேவியர்கள்
அனைவரும் கூடிவந்தார் அதிசயத்தைக் கண்டார்கள்
ஏணியின் அதிசயத்தை எழுதின சித்திரத்தைத்
தங்களைப் போலநன்றாய்ச் சமைந்த பதுமைகளைக்
கண்ணாலே கண்டார்கள் காரிகைமார் எல்லாரும்
சந்தோஷ மானார்கள் சுந்தர [4]மானார்கள்

1 சர+ஏணி=அசையும் ஏணி.
2 இராஜகன்னி=அல்லி.
3 பரியவசி=பருமனாகியசூலம் அல்லது கழுமுள்.
4 பட்டம்=காற்றாடி.
5 சுந்தர+மானார்கள்=அழகியபெண்கள்.

### அல்லி, தச்சர்களை ஏணியிலேறச்சொன்னது

பிறவா முடிதரித்த பெண்பெருமாள் அல்லியம்மாள்
கண்ணுள ரேயிந்தக் கனகரத்ன ஏணியின்தன்
சூக்ஷமந்தெரியவேண்டும் சோதனைபார்க்கவேண்டும்
ஏழுபேர் தமிலொருவன் ஏறுங்கள் ஏணியின்மேல்
இது,
உயரப் பறக்கிறதோ ஓயாமற் சுழல்கிறதோ
ஏறிப்போய் நின்றவனை இறுகப் பிடித்தவற்கு
வாதனை வேதனைகள் வருத்தங்கள் செய்கிறதோ
சோதனைபார்க்க வேண்டும் என்றாள் துடியிடையாள்
கேட்டார்கள் அவ்வசனம் கிலிபிடித்தார் கம்மாளர்
ஏழுபேர் தச்சர்களும் ஏக்கம் பிடித்தார்கள்
நமக்கு விதிமுடிவோ நமனுக்கு நாமிரையோ
என்று தமக்குள்ளே எண்ணிஉரைக்கின்றார்கள்
அல்லி முகநோக்கி அவர்கள் மொழிகின்றார்
என்னசெய் வோம்தாயே யேறினோ மேயானால்
தப்பிப் பிழைப்போமோ தரணியில் விழுவோமோ
மூளை சிதறியெங்கள் முழிபிதுங்கிப் போய்விடுமோ
பிராணனே போய்விடுமோ [1] பிள்ளைகுட்டி யுடையவர்கள்
என்றார் அதுகேட்டாள் ஏந்திழையாள் அல்லியம்மாள்
சோதனைபார்க்கவேண்டும் சூக்ஷமந்தெரியவேண்டும்
உங்கள்,
[2] காயம் சிதைந்துபெருங் [3] காயங்கள் பட்டாலும்
எத்தனைநஷ்டங்கள்தாம் வந்தாலும் பெரிதல்ல
[4] காயத்தை யாற்றியுங்கள் [5]காயம் இருக்குமட்டும்
காணி பலகொடுப்பேன் [6]கனகஞ்சொரிந்திடுவேன்
[7] குஞ்சு குழந்தையுடன் குடும்பத்தை ஆதரிப்பேன்
ஏறுங்கள் ஏணியின்மே லேங்காமல் என்றாளே
அவ்வார்த்தை கேட்டவுடன் அவர்கள் எழுவர்களில்

---

1 பிள்ளைகுட்டி = ஆண்பெண் (மக்கள்)
2×5 காயம் = உடல். 3×4 காயம் = இரணம்.
6 கனகஞ்சொரிந்திடுதல் = கனகாபிஷேகஞ் செய்தல் = பொன்முதலியவைகளை நிரம்பக்கொடுத்தல்.
7 குஞ்சுகுழந்தை = குருத்துக்குழந்தை, வாக்குழந்தை.

## தச்சர்களில் மூத்தவன் ஏணிமேல் ஏறினது

மூத்தவன் சம்மதித்து முன்னாலே வந்துநின்று (அவ்)
ஏணிப் படிகளிலே ஏறி வருகையிலே
அந்தந்தப் படியதனில் அதிசயத்தைத் தான்பார்த்துப்
பத்தாம் படியினிலே பாங்குடனே வந்துநின்றான்
அவ்விடத்தி லேயிருக்கும் அதிசயத்தைப் பார்க்கையிலே
சூஸ்திர மறையாணி துருசாகப் பாய்ந்ததுவே
[1] கூரிய வசிகளெல்லாம் குடலைக் கலக்கினவே
உள்ளங்கால் வசியுருவி உச்சியில் ஏறினதே
கபாலந் திறந்திரண்டு கண்கள் பிதுங்கினவே
கவிழ்ந்ததே அந்தஏணி கனமான பூமியிலே
கீழே யிருந்ததச்சர் கிலாணி முறுக்கிவிட்டார்
ஏணி பறந்தவிதம் என்னென்று நானுரைப்பேன்
காற்றாடி பறப்பதுபோல் கார்மேகம் பறப்பதுபோல்
பருந்து பறப்பதுபோல் பக்ஷிகள் பறப்பனபோல்
கொக்கு பறப்பதுபோல் குருவி பறப்பதுபோல்
நான்கு திசைகளிலும் நன்றாய்ச் சுழல்கிறது
நடுவே பறக்கிறது நாட்டியஞ் செய்கிறது
சுழன்று வருகிறது சூஸ்திரத்தா லவ்வேணி
போகவிட்ட இடந்தேடிப் போகிறது பொய்யேணி
அந்தரத்தி லேசுழல அல்லியம்மாள் பார்த்துவிட்டாள்
கண்டாள் அதிசயத்தைக் காரியம் பலித்ததென்றாள்
அதனை,
இறக்கி விடுங்களென்றாள் ஏந்திழையாள் அல்லியம்மாள்
இறக்கினவு டனேயந்த ஏணி விழுந்ததுவே
சூஸ்திர ஏணிவந்து சுழன்று விழுந்ததுவே
அந்தர ஏணியசைந் தசைந்து விழுந்ததுவே
குத்துயி ருடனுடலம் குலைந்ததில் இருந்தவனை
மெள்ளக் கழற்றினார் மேவியங் கிருந்தவர்கள்

---

[1] கூரிய=கூர்மையாகிய.

அவன்மேல் மனமிரங்கி அல்லிமலர்ப் பெண்பெருமாள்
அவன்,
காயங் களையாற்றக் கட்டளை யிட்டபின்பு
பொன்னும் நவமணியும் பூமியுங் காணிகளும்
அவன்,
சாகிற மட்டுமென்றிச் சந்ததியும் அனுபவிக்கத்
தந்தாள் மிகமகிழ்ந்தாள் தம்பிமார் அறுவரையும்
அங்கே,
மறைவா யிருங்களென்று வாழ்வரசி ஏவினளே
ஏவின படியவர்கள் இருந்தார் அறுவர்களும்
ஏணியும் அழகாக இருந்ததே அரண்மனையில்
[1] எப்போ வருவானோ ஈடழிவான் படுபாவி
மாநாகக் கொடியனவன் வரக்காணோம் என்றுசொல்லிப்
பெண்டுகள் எல்லாரும் பேசிக்கொண் டிருந்தார்கள்

### துர்யோதனன் மறுபடியும் மதுரைக்கு வருதல்.

இங்கிப் படியிருக்க அங்கே துரியனவன்
மூன்று தினங்களையும் மூவருஷ மாய்த்தொலைத்து
நான்காநாட் காலையிலே நாகக் கொடிவேந்தன்
போகலாம் மதுரையென்று மோகந் தலைக்கேறி
மூஞ்சி தெளிவாய்முக் கட்டுங்கட் டிக்கொண்டான்
ஒன்றியாய் வெளியானான் உலகாளும் வேந்தனவன்
ஏழொட்டை தாஞ்சுமக்கும் எடையுள்ள கோடிதனம்
ஏற்றினான் யானையின்மேல் ரகஸியமாய் வருகின்றான்
ஆள்படைக ளில்லாமல் ஆனையையோட் டிக்கொண்டு
மதுரை நகர்நோக்கி மன்னன் வருகின்றான்
தூரப் பயணஞ் சுருக்காய் வழிநடந்து
தென்பாண்டி நாட்டிலுள்ள திருமதுரை நகர்சேர்ந்தான்
கோட்டைவாசலைக்காக்கும் கொம்பனையை நோக்கியவன்
நானிங்கு வந்தசெய்தி நங்கையல்லிப் பெண்கொடிக்குச்
சொல்லிவா என்றானே தோகை அதுகேட்டாள்
வாசலைக் காக்குமந்த மங்கை மனமருண்டாள்

---

[1] எப்போ=எப்போது என்பதன் கடைக்குறை.

### தாதி, துர்யோதனன்வந்ததை அல்லிக்குச் சொல்லுதல்

அவசரமாய் ஓடிவந்தே அல்லிக்குச் சொன்னாளே
அல்லி அதுகேட்டுச் சந்தோஷம் ஆனாளே
கொலுமுகந் தேடியந்த கொம்பனையாள் அல்லியம்மாள்
அரிவைமார் கொண்டாட அவசரமாய் வந்தாளே
மற்றுமுள்ள பெண்களெல்லாம் மாளிகையில் தாம்புகுந்து
ஜன்னல் களைத்திறந்து மன்னவனைப் பார்த்திருந்தார்

### அல்லி, தாதியரை ஏவி துர்யோதனனை அழைத்துவரச்சொல்லுதல்

அப்பொழு தல்லியம்மாள் அங்குள்ள தாதியரைக்
கூப்பிட்டுச் சொல்லுகின்றாள் கொற்றவனை நீர்கண்டு
அவன்,
கொண்டுவந்த திரவியத்தைக் கொட்டிக் கணக்காக்கித்
தொம்பை நிறையவதைத் தோகையரே போடுமென்பீர்
பாவி திரவியத்தை மேவிநீர் தீண்டாதீர்
அசடன் திரவியத்தை அரிவைமீர் தீண்டாதீர்
என்ற வுரைகேட்டார் எழுந்தார்கள் தாதியர்கள்
அப்படியே செய்வமென்று வந்தார்கள் எல்லாரும்
அரசனைக் கண்டார்கள் அரண்மனைக் கழைத்துவந்தார்
மன்னனைக் கண்டார்கள் மாளிகைக் கழைத்துவந்தார்
ஐந்தாம் படித்தளத்தில் அவனை நிறுத்தி விட்டார்
அவன்,
கொண்டுவந்த திரவியத்தைக் கொட்டினான் அவ்விடத்தில்
தாதிமார் யாருமதைச் சட்டையே பண்ணவில்லை
வேடிக்கை பார்த்தந்த மெல்லியலார் நின்றார்கள்
நின்றார் முகநோக்கி நிருபன் துரியனவன்
என்னாசை தனைத்தணிக்க இனிமேல் தடையென்ன
நான்,
வாலாமோ வுள்ளென்று மாதரசி தனைக்கேட்டுச்
சீக்கிரமா வருகவென்றான் தேன்மொழியார் ஓடிவந்து

பாண்டிவள நாடாளும் பைங்கொடிக் கந்தசெய்தி
தெரிவித்து நின்றார்கள் தேன்மொழியாள் அல்லியம்மாள்
தச்சர் தமையழைத்தாள் எச்சரிக்கை செய்தாளே
பெண்டுகள் அனைவரையும் பேசா திருங்களென்றாள்
அரசன் சுயோதனனை அப்போதே அழைத்துவந்து
கொலுமுக நேராகக் கொப்பெனவே கூட்டிவந்து
சாய்ந்திருக்கு மேடையண்டைச் சமர்த்தனை நிற்கவைத்தே
அங்குள்ள ஏணியின்மேல் ஏறினால் இதுவரையில்
காணாத புதுமைகளைக் காணலாம் இவ்வுலகிற்
பாராத புதுமைகளைப் பார்க்கலாம் பார்த்துவிட்டுக்
கீழே,
இறங்கினீர் வந்தவுடன் இஷ்டமுள்ள காதலியைச்
சுபத்திரை நாயகியை மணக்கலாம் என்றுரைப்பீர்
என்றுசொல்லித் தாதியரை ஏவினாள் அதன்படியே
தாதிமார் எல்லாரும் தாழ்க்காமல் ஓடிவந்து
துரியன் தனைக்கண்டு சுறுக்காக அழைத்துவந்து
கொலுமுகத் தேணியண்டைக் கொப்பெனவே நிற்கவைத்தார்
இந்தப் புதுமையைநீர் எங்கேனும் பார்த்ததுண்டோ
இங்குள்ள ஏணியின்மேல் ஏறி யிறங்கிவந்தால்
பத்துப் படிகளிலும் பாங்குடனே ஏறிவந்தால்
புதுமைகளைப் பார்த்துவிட்டுப் பூமியில் இறங்கிவந்தால்
மாது சுபத்திரையை மணக்கலா மன்னவரே
தாமதஞ் செய்யாமல் தயவுடன் ஏறுமென்றார்

### துர்யோதனன் ஏணியில் ஏறுதல்

அவள்,
சொன்ன மொழிகேட்டுச் சுயோதனன் மனமகிழ்ந்தான்
சந்தோஷ மானானே சர்ப்பக் கொடியனவன்
உள்ளம்பூ ரித்தானே உடலும்பு ளகமானான்
மனமுங் குளிர்ந்ததனால் வந்துநின்றான் ஏணியண்டை
பெண்களெல்லாந் தனைநோக்கப் பெருமையுடன் வந்துநின்றான்
மாதரெல்லா மெச்சுதற்கு மகிழ்ச்சியுடன் வந்துநின்றான்

முத்தால் அலங்கரித்த முதற்படியில் ஏறிநின்றான்
ஆதிசேஷன்மகள்போல் அங்கிருக்கும் பதுமையின்தன்
அதிசயத்தைக் கண்டவுடன் மதிசற்றே மயங்கியவன்
ஏனோ இவளிங்கே யிருக்கின்றா ளென்றெண்ணி
[1] ஆலித்துப் பூரித்தான் அதற்கப்பா லேயிருக்கும்
இரண்டாம் படிமேலே ஏறினான் அவ்விடத்தில்
போக வதிபோலப் புஷ்பரா கம்மிழைத்த
பொற்பதுமை வீற்றிருக்கும் புதுமையைக் கண்டவுடன்
இதுவும் அதிசயந்தான் இவளிங் கிருப்பானேன்
என்று மனதிலெண்ணி அதற்கப்பா லேயிருக்கும்
மூன்றாம் படித்தளத்தில் மோகமுடன் ஏறிவந்தான்
பவளக்கொ டிபோலே பதுமையொன்று கண்டானே
அந்தப் பதுமையின்தன் புதுமைக் கதிசயித்தான்
நான்காம் படித்தளத்தில் நலமுடனே ஏறிவந்து
மின்னொளி மங்கையைப்போல் மின்னுகின்ற பொற்பதுமை
நீல மணியிழைத்து நிலவுவதைக் கண்டானே
இம்மங்கை தன்னழகை என்னநான் சொல்வனென்றான்
ஐந்தாம் படிமேலே அதிசயமாய் ஏறிவந்தான்
அங்கே ஒருபதுமை அல்லி கொலுவிருக்கும்
பாவனைபோற் கண்டானே பாம்புக்கொ டிவேந்தன்
அந்த இடத்திலவன் நின்றான் அசையாமல்
இவளுடைய தயவெனக்குப் பூர்த்தியா யிருக்கையிலே
என்ன குறைச்சலென்றான் அதற்கப்பா லேயிருக்கும்
ஆறும் படியேறி அவசரமாய் வந்துநின்றான்
அந்தப் படிமேலே அழகுள்ள ஏலகன்னி
மங்கையைப் போலிருக்கும் தங்கப் பதுமைதன்னைக்
கண்ட வுடன்மனதிற் காத லதிகரித்தான்
அந்தப் படித்தளம்விட் டதற்கப்பா லேயிருக்கும்
ஏழாம் படித்தளத்தில் ஏறிவந்து நின்றானே

1 ஆலித்தல்=களித்தல்

அவ்விடத்துச் சித்திரமும் அதிசயமும் பார்த்ததன்பின்
எட்டாம் படித்தளத்தில் ஏறிவந்தான் அவசரமாய்
மாது சுபத்திரையை [1] மயிலியலைக் காணேமே
மேலே யிருப்பாளோ மேகவர்ணன் தங்கையவள்
இங்கேயுங் காணேமே ஏந்திழையாள் சுபத்திரையை
என்று மனதிலெண்ணி யதற்கப்பா லேயிருக்கும்
ஒன்பதாம் படித்தளத்தில் உயரவே காலைவைத்தான்
அவ்விடத்திற் சோதிதனை அதிசயமாய்க் கண்டதன்பின்
இங்கேயுங் காணேமே ஏந்திழையாள் சுபத்திரையை
என்று மனதிலெண்ணி யதற்கப்பா லேயிருக்கும்
பத்தாம் படிமேலே பாங்குடனே காலைவைத்தான்
பஞ்சணை மெத்தையின்மேல் பள்ளிகொண்ட பாவனையாய்ப்
பாவை சுபத்திரைபோல் பதுமையைக் கண்டானே
இங்கேநீ துணையின்றி ஏன்படுத்தாய் ஏந்திழையே
என்றுரைத்தப் பதுமைதனைக் கட்டித்தழுவிக்கொண்டான்
கட்டித் தழுவுகையில் [2] கடிய வசிகளவன்
பக்கத்தில் தைத்தமையால் பதைத்துத் துடிக்கின்றான்
அவன்,
குந்தின இடந்தனிலே கூர்வசி பாய்ந்ததினால்
அசைய முடியாமல் அவஸ்தைப் படுகின்றான்
உள்ளங்கால் வசியுருவி யுச்சியிற் பாய்ந்ததனால்
கள்ளன் அகப்பட்ட காரணம்போற் கத்துகிறான்
கால்வைத்த இடத்தினிலே கழற்றாணி தைத்ததனால்
நின்ற நெடுமரம்போல் நிற்கின்றான் என்னசெய்வான்
தழுவின கைகளிலே கழுவாணி தைக்கிறது
தொண்டையங் குழியினிலே துறட்டாணி தைக்கிறது
மண்டையைத் துளைத்துருவி மறையாணி தைக்கிறது
வயிற்றிற் பலவசிகள் வரிசையாய்த் தைத்தமையால்
ஈரற் குலைசரிந்தே இரத்தம் வழிகிறது

---

1 மயில் + இயல் = மயில் போலும் சாயலுடையவள்.

2 கடிய = கூர்மையாகிய ; கடுநுனைப்பகழிஎன்பதுபோல.

குடல்கள் அறுகிறது கொதிக்கிறது மேனியெல்லாம்
இறைச்சி துடிக்கிறது முழிகள் புரண்டவைகள்
பிதுங்குகின்ற படியாலே [1] வெதும்புகின்றான் படுபாவி
காதல் நெருப்பவிந்து கைலாசங் காணுகிறான்
ஆசை நெருப்பணைந்தே அரன்பாதங் காணுகிறான்
இச்சை நெருப்பணைந்தே ஈசனடி காணுகிறான்
மங்கை நினைப்பொழிந்து வைகுந்தங் காணுகிறான்
அரிவை நினைப்பொழிந்தே அரிபாதங் காணுகிறான்
தெரிவை நினைப்பொழிந்தே சிவன்பாதங் காணுகிறான்
ஐயோ அபயமென்றே அலறுகிறான் கூவுகிறான்
குய்யோ முறையோ என்றழுது கூவுகிறான்
என்செய்வேன் என்செய்வேன் என்று புலம்புகிறான்
போடுகிறான் பெருங்கூச்சல் பெண்கணகைக் கின்றார்கள்
எருமைக் கடாப்போல இரைச்சல் இடுகின்றான்
வண்ணான்தன் வாகனம்போல் போடுகிறான் பேரிரைச்சல்
எண்ணாதும் எண்ணுகின்றான் பூனைவாய் எலிபோல
பாம்பின்வாய்த் தேரையைப்போல் பலபல நினைக்கின்றான்
வாதனையும் வேதனையும் வருத்தமும் படுகின்றான்
அப்போது,
ஏணி நிலைபுரண்டு சாய்ந்து விழுந்ததனால்
கூட விழுந்தானே குப்புறவே மன்னனவன்
பிறன்மனைப் புகாமைபெரும் அறமெனத் தகுமென்ற
பெரியோர் உரைமறந்து பேருலகிற் பிறன்மனைக்கே
பெருமை குலைந்துநிற்கும் பேயர்படும் பாடு
தூரியன் படுகின்றான் மரியாதை கெடுகின்றான்
தீய நினைவுகளும் செய்கைளும் கொண்டமையால்
உத்தம மாதர்களை ஊரார் மனைவிகளை
பெற்றதாய் தங்கையர்போல் பெருமையாய் எண்ணாமல்
கலியாண மண்டபத்தில் கைமேலே கையைவைத்து
வேதியர் சாக்ஷியுடன் வித்வான்கள் சாக்ஷியுடன்

---

1 வெதும்பல்=வாடல்.

ஆதி சிவபெருமான் அரியயன் எனுமிவர்கள்
மூவர்கள் சாக்ஷியுடன் தேவர்கள் சாக்ஷியுடன்
உற்றார்கள் சாக்ஷியுடன் ஊரார்கள் சாக்ஷியுடன்
பெற்றார்கள் சாக்ஷியுடன் பேருலகோர் சாக்ஷியுடன்
மற்றார்கள் சாக்ஷியுடன் வஞ்சனை நானுனக்குச்
செய்வ திலையென்று சத்தியஞ் செய்துதந்து
மங்கி லியந்தரித்து மனமகிழ்ந்து மணமுடித்துக்
கொண்ட [1] மனைவியர்க் கிரண்டகஞ் செய்பவர்கள்
அரிய நரகக்குழியில் அனுபவிக்கும் வாதனையை
இங்கே,
சூரியன் அனுபவித்துத் துடிக்கின்றான் ஏணியின்மேல்

### அல்லிதன்னைப் பெற்ற பாண்டியரிடத்து ஏணியைஅனுப்புதல்

அந்தச் சமயமதில் அல்லியம்மாள் சீக்கிரமாய்
ஓலை யெடுத்ததனில் உத்தமராம் பாண்டியர்குத்
தன்னுடைய தந்தையர்க்குச் சாஷ்டாங்க தெண்டனிட்டுத்
தேவரீர் தந்தையரே க்ஷேமமுடன் நானெழுதும்
விண்ணப்பம் என்னவென்றால் வீணனிந்த சண்டாளன்
ஐவரையும் ஓட்டிவிட்டே அரசாளும் பாவியிவன்
பஞ்சவரை ஓட்டிவிட்டுப் பாராளும் பாவியிவன்
அடைக்கலமா என்னிடத்தில் அமர்ந்திருந்த பெண்டுகளை
ஐவர் மனைவியரை அழிம்புபண்ண வேண்டுமென்று
பெண்களைச் சிறைபிடிக்கப் பெண்மதுரை தேடிவந்தான்
கற்புடையாள் சுபத்திரைமேல் காதல் பெரிதானேன்
மாது சுபத்திரைமேல் மையல் பெரிதானேன்
ஆதியிலே எனக்கவள்மேல் ஆசை மிகுந்ததனால்
அன்றுமுத லின்றளவும் அன்னமா காரமில்லை
எந்நாளும் அவளாசை இதுவே பெரிதானேன்
ஐவரில்லை ஆகையினால் அரிவையை மணப்பதற்கு
தங்கு தடையுமில்லை தையலரே இச்சமயம்

1 மனைவியர்க்கு இரண்டகம்=மனைவிகளுக்குத்துரோகம்.

நல்ல சமயமவர் நாசமாய்ப் போனார்கள்
ஐவருங் காடுசென்றார் அங்கேயே செத்தார்கள்
செத்தார் வருவாரோ தேன்மொழியீர் இனியொருகால்
மாண்டார் வருவாரோ மங்கைமீர் இனியொருகால்
என்னுடைய,
நாடு தருவேனே நகரமு நான்தருவேன்
வீடு தருவேனே விரும்பியவை நான்தருவேன்
ஏழொட்டைப் பொன்தருவேன் ஏந்திழையாள் சுபத்திரைக்குப்
பட்டமுங் கட்டியவள் பாதம் பிடிப்பேனே
அவளை,
எனக்கு மணமுடிப்பீர் ஏந்திழைமீர் என்றுசொல்லித்
தென்மதுரை தேடிவந்தான் தீயோன் படுபாவி
ஏந்திழையைச் சிறைபிடிக்க இவ்விடம் வந்தானே
மங்கையைச் சிறைபிடிக்க மதுரைக்கு வந்தானே
கற்புடைய சுபத்திரையைக் கற்பழிக்க வந்தானே
பலவந்தம் செய்ததனால் பாவையைப் பற்றவந்தான்
ஆகையினாலேயிந்த அரும்பாவித் துஷ்டனைநான்
எல்லாரும் பார்க்கவிந்த ஏணியி லேற்றிவைத்தேன்
இவனுடன் இவ்வேணி எங்குவந்து விழுந்தாலும்
ஓலையைப் படித்ததன்பின் உத்தமரே இவன்மேலே
காறி யுமிழ்ந்துமது காலால் உதைத்திடுங்கள்
காலால் உதைகொடுத்தால் கதறுவான் படுபாவி
காலால் உதைக்காமல் கையாலே நீரெடுத்தால்
உமது,
மேன்மை அழிந்துவிடும் வீணனைத் தீண்டாதீர்
ஐயன்மீர் உம்முடைய [1] ஆசியை மிகவிரும்பும்
அடியேன் உமதுமகள் இங்ஙனம் அல்லியம்மாள்
என்றே விரைவாக எழுதி முடித்தவுடன்
எல்லாருங் காணவந்த ஏட்டைச் சுருட்டியங்கே
காத்திருந்த தாதியர்கள் கையிற் கொடுத்திந்த

1 ஆசி = ஆசீர்வாதம்.

அரசன் குடுமியிலே அரிவைமீர் முடியுமென்றாள்
அப்படியே முடிந்தார்கள் அவனுடைய குடுமியிலே
அவனை,
அல்லி சவுக்கெடுத்து [1] சாடுகிறாள் ஆனமட்டும்
வஞ்சந் தெளியுமட்டும் வாழ்வரசி சாடுகிறாள்
கோப மடக்குமட்டும் சாடியந்தக் கொம்பனையாள்
தச்சர் தமையழைத்து ஜாடையாய்க் கண்காட்டி
விசையை முறுக்கியிதை மேலே பறக்கவைப்பீர்
என்னுடைய தந்தையராம் பாண்டியர் இருக்கின்ற
ஊருக்குப் பாதகனை ஓட்டுங்கள் எனவுரைத்தாள்
அவர்கள்,
அப்படியே அம்மாவென் றதனை முறுக்கிவிட்டார்
பாண்டியர் ஊர்தனக்குப் பக்குவமாய் அனுப்புவித்தார்
அனுப்பின அவ்வேணி ஆகாய வழியாகக்
காற்றாடி பறப்பதுபோல் கடுகப் பறந்தெழும்பி
மேலே பறக்கிறது மேலுலகம் போகிறது
கருடன் பறப்பதுபோல் காற்று விசையாலே
சுழன்று சுழன்றுசுழன் றேறிப் பறந்துசென்று
பாண்டியர் கொலுமுகத்தில் நீண்டு விழுந்ததுவே
குப்புறக் கவிழ்ந்ததுவே கொற்றவர்கள் சபைமுன்னே
சுழன்று விழுந்ததுவே துரைகள் கொலுமுகத்தில்
ஏணி விழுகையிலே திடுக்கிட்டார் அரசரெலாம்
அனைவோரும் ஓடிவந்தார் அதிசயத்தைப் பார்த்தார்கள்
பாராளும் ராஜனிவன் பார்மேல் விழுந்ததென்ன
மண்ணாளும் ராஜனிவன் மண்மேல் விழுந்ததென்ன
ஊராளும் ராஜனிவன் சீர்குலைந்து போனதென்ன
துரியோ தனனிவற்குப் பெரியதுன்பம் வந்ததென்ன
[2] பரிய வசிகள்தைத்துப் பதைபதைத்து விழுவானேன்
ஆரிக்கோ லஞ்செய்தார் அநியாயக் கொள்ளையென்பார்

1 சாடுதல்=அடித்தல்.
2 பரிய=பருமை+அ=பருமனான

அவர்கள்,
ஏணியைக் கையாலே எடுத்தார்கள் சீக்கிரமாய்
அது,
பூமிக்குள் இன்னுநன்றாய்ப் புதைந்து கவிழ்கிறது
மன்னவனை மண்ணதனில் புரட்டுகிற தென்னசெய்வான்
குடுமியிற் கோத்திருந்த ஓலையைக் கோவேந்தர்
கண்டார் அவிழ்த்ததனைக் கடுகப் படித்தார்கள்
ஓலையை அதிசயமாய் உத்தமர் படித்ததனால்
ஐவரில்லா வேளையிலே ஆதீனப் பெண்டுகளில்
சுந்தர மங்கைதனைச் சுபத்திரை நாயகியைச்
சிறைபிடிக்க வந்திருந்தான் தீயனிந்த சண்டாளன்
அல்லி அடைக்கலமா அண்டின பெண்டுகளில்
[1] ஒருத்தியை வசமாக்கி ஒருமிக்க மற்றவரைக்
கற்பழிக்க வந்திருந்தான் கபடனிந்த சண்டாளன்
சுபத்திரை ஆசைகொண்டு துஷ்டனிவன் வந்திருந்தான்
மதுரை நகர்தேடி மாபாவி வந்திருந்தான்
ஆளனில்லா மங்கையர்தாம் அலைந்து திரிகையிலே
புருஷனில்லா மங்கையர்தாம் புலம்பித் திரிகையிலே
கணவனில்லா மங்கையர்தாம் கண்ணீர் விடுகையிலே
இவன்,
அவர்க ளனைவரையும் அழும்புசெய்ய வந்திருந்தான்
ஆகையால் இவன்மேலே கோபித்தாள் அல்லியம்மாள்
இவ்வேணி செய்திவனை ஏற்றினாள் இதன்மேலே
இவனைக்,
கண்டார் நகைத்திடுங்கள் காறி யுமிழ்ந்திடுங்கள்
பார்த்தார் நகைத்திடுங்கள் பரிகாசஞ் செய்திடுங்கள்
ஏணியைக் கையாலே எடுத்தால் அழுந்திவிடும்
காலால் உதைகொடுத்தால் கடுகப் பறந்துவிடும்
இவனைக்,
கையாலே தீண்டாதீர் கனம்பெற்றுப் போய்விடுவான்

---

[1] ஒருத்தியை = சுபத்திரையை.

ஏணியைப்,
போவென் றுதைகொடுத்தால் பொன்மதுரை வந்துவிடும்
என்றெழுதி அனுப்பிவைத்தாள் என்று தெரிந்துகொண்டார்
பட்டோலை படித்தபின்பு பாவியவ னென்றுணர்ந்தார்
இவன்,
நம்முடைய பெண்டுகளை நலமழிக்க வந்தவனோ

## பாண்டியர் ஏணியைத் தமது காலால் உதைத்தல்.

நாடாளு நமதுமகள் நல்லதொழில் செய்தாளே
என்று மனதிலெண்ணி ஓலையை யெடுத்துவந்து
அவன்,
தலையில் முடிந்துவிட்டுத் தாமதஞ் செய்யாமல்
காறி யுமிழ்ந்தார்கள் காலால் உதைத்தார்கள்
மதுரைக்குப் போவென்று மாபாவிக் குரைத்தார்கள்
ஏணி,
சுழன்று சுழன்றுசுழன் றெழும்பிப் பறக்கிறது
விசையாய்க் கிளம்பிவந்து மேலே பறக்கிறது
பருந்து பறப்பதுபோல் பறந்து பறந்துவந்து
மதுரைக் கொலுமுகத்தில் மாவேணி விழுந்ததுவே
குப்புறவே சுழன்றுவந்து கொலுமுகத்தில் விழுந்ததுவே
விழுந்த ஒலிகேட்டு மெல்லியலார் எல்லாரும்
அல்லிமலர் நாயகியும் அவ்விடத்தில் வந்தார்கள்
கூவினான் உயிருடனே கொடும்பாவி வாய்குளறி
அழுதான் உயிருடனே அரும்பாவி வாய்குளறி
அல்லிமலர் நாயகியே அடியேன் உனக்கபயம்
அபயம் அபயமையோ அம்மாநான் உன்னபயம்
மந்திரப் பெண்மணியே மாதாவே என்னுடைய
அற்ப மதியாலே அடியேன் பிழைசெய்தேன்
என்தன்,
பிராணன் வதைகிறதே பெற்றவளே என்னசெய்வேன்
என்று புலம்புகிறான் இனியமுகம் காட்டுகிறான்

பல்லைத் திறக்கின்றான் பரிதாபங் காட்டுகிறான்
கெஞ்சுகிறான் வேண்டுகிறான் அஞ்சுகிறான் என்னசெய்வான்
வேங்கை வலைப்பட்டால் வேடர் விடுவாரோ
ஆனை அகப்பட்டால் சிங்கம் விடுமோதான்
அப்படியே அல்லியம்மாள் ஆறாத கோபமுடன்
அவனைக்,
கொத்துப் பிரம்பெடுத்துக் குலைநடுங்கச் சாடுகிறாள்
ஐயோநான் செத்தேனே ஐயையோ என்னசெய்வேன்
என்றழுது கத்துகிறான் ஈடழிவான் படுபாவி
அருகிருந்த தச்சர்களை அல்லியம்மாள் அப்போது
விசையை முறுக்கிவிட ஏவினாள் அவசரமாய்

## ஏணியை ஆதிசேஷனிடத்திற்கு அனுப்புதல்

சேஷன் அரசாளும் சீர்மைக்குப் பாதகனை
அனுப்பி விடுங்களென்றாள் அப்படியே கம்மாளர்
சேஷனுலகஞ்சென்று திரும்பிவா என்றுசொல்லி
விசையை முறுக்கிவிட்டார் அசைகிற தவ்வேணி
மேலே பறக்கிறது விசையாய்ச் சுழல்கிறது
குருவி பறப்பதுபோற் கூசாமற் பறக்கிறது
சுழன்று சுழன்றுசென்று சுறுக்காகப் போகிறது
சேஷனுலகஞ்சென்று திடீரென் றிறங்கியங்கே
இடிபோலப் பாம்புகளின் இடையில் விழுந்ததுவே
மலைபோலப் பாம்புகளின் மத்தியில் விழுந்ததுவே
நமன்போலப் பாம்புகளின் நடுவில் விழுந்ததுவே
என்னஇது வென்றுசொல்லி எழுந்தன சர்ப்பமெல்லாம்
கும்பலாய் அவைகளங்கே கூடி விரைந்தோடி
வந்தன ஏணியண்டை மன்னவனைக் கண்டனவே
ஏணி யிதுபோல எங்கெங்கும் கண்டதில்லை
என்று மனதிலெண்ணி ஏணியைக் கைகளினால்
எடுத்தன அவ்வேணி இறங்கி யழுந்தினது
இதுவென்ன காரணமோ எவனோ ஒருமனிதன்

கவிழ்ந்து கிடக்கின்றான் கனவசிகள் பாய்ந்திடவே
என்றே அவன்தலையில் முடிந்திருந்த ஏடவிழ்த்து
வாசித்துப் பார்த்தனவே மாநாகம் எல்லாமும்
அல்லி அனுப்பிவைத்த அதிசயச் சேதியிது
ஐவரையும் ஓட்டிவிட்ட ஆண்மையினால் படுபாவி
தென்மதுரைப் பெண்டுகளைச் சிறைபிடிக்க வந்தானே
அருச்சுனன் தேவியரை அழிம்புசெய்ய எண்ணியிவன்
தொட்டுப் பிடிக்கவந்தான் சுபத்திரை நாயகியை
பெண்டுகளை யழிக்கவந்த பேர்பெரிய துரோகியிவன்
மங்கையரை அழிக்கவந்த மாபெரிய துரோகியிவன்
ஆகையால் அல்லியம்மாள் அதிசய ஏணியின்மேல்
ஏற்றினாள் பாதகனை இங்கே அனுப்பிவைத்தாள்
நாம்,
காறி யுமிழ்ந்திவனைக் காலால் உதைக்கவென்றாள்
என்று தெரிந்துகொண்டு மதுரைத் துரைச்சியவள்

### ஆதிசேஷன் ஏணியைக் காலால் உதைத்தல்

நல்லதொழில் செய்தாளே நாடாளுங் கன்னியென்று
காலால் உதைத்தனவே கனமான ஏணிதனைக்
காறி யுமிழ்ந்தனவே காற்றாய்ப் பறந்ததது
மதுரை நகர்நோக்கி மாவேணி வருகிறது
சிட்டுக் குருவியைப்போல் எட்டிப் பறக்கிறது
காற்றாடி பறப்பதுபோல் கடுகப் பறக்கிறது
செம்பருந்து பறப்பதுபோல் சீக்கிரமாய்ப் பறக்கிறது
சுழன்று சுழன்றுசுழன் றெழும்பி மதுரையிலே
வந்து விழுந்ததுவே அல்லிமலர் நாயகிமுன்
திடீரென் றதுவிழவே தேன்மொழியாள் கண்டுவிட்டாள்
கையிற் சவுக்கெடுத்து கற்புடையாள் வந்துநின்று
முன்பின் நினையாமல் மொய்குழலாள் சாடுகிறாள்
பரிதாபம் பாராமல் பாவியைச் சாடுகிறாள்
அவன்,
பல்லைத் திறந்துகொண்டு பக்குவமாய்க் கெஞ்சுகிறான்

வாயைத் திறந்துகொண்டு வணக்கமாய்க் கெஞ்சுகிருன்
ஆதி சிவன்பதியை ஐயோநான் சேருகிறேன்
பரம சிவன்பதியைப் பைங்கிளியே சேருகிறேன்
தத்தளித்துப் போகின்றேன் தாயேநீ தயைசெய்வாய்
என்னைநீ,
கொல்ல நினைத்திருந்தால் கொன்றுவிடல் நல்லதம்மா
மடிக்க நினைத்திருந்தால் வாளாலே வெட்டிவிடு
குலதெய்வம் நீயென்று கும்பிடுவேன் மாதாவே
என்,
உயிரைநீ தப்பவைத்தால் உனக்கடிமை நானலவோ
என்றிவன் வாதனையால் இரங்கி அழுகையிலே
இரங்காளே பெண்பெருமாள் எட்டிப் பழம்போலே
கண்கள் சிவந்தாளே காந்தாள மானுளே
ஈடழிக்க வந்தவனுக் கிரங்குமோ என்மனது
கற்பழிக்க வந்தவற்குக் கரையுமோ என்மனது
உன்,
சீவனைக் கொல்லாமல் சித்ரவதை செய்வேனே
துரியா படுபாவி துரோகியே உன்றனைநான்
மடித்தால் தெரியாது வதைத்தால் தெரியுமடா

### ஏணியை மேகராஜனுக் கனுப்புதல்

மின்னொளியைப் பெற்றெடுத்த மேகரா ஜன்பதிக்குத்
தாமதஞ் செய்யாமல் தச்சர்களே ஏணிதனை
அனுப்புங்க ளென்றுசொன்னுள் அப்படியே கம்மாளர்
விசையை முறுக்கிவிட்டார் அசைகிற தவ்வேணி
பட்டம பறப்பதுபோல் சுழன்று பறக்கிறது
ஊர்க்குருவி பறப்பதுபோல் உயரப் பறக்கிது
விசையாய்ப் பறந்துவந்து மேகரா ஜன்கொலுவில்
திடீரென்று வீழ்ந்ததினுல் திடுக்கிட்டான் ராஜனவன்
சீக்கிரமா யோடிவந்து தூக்கினுன் கையாலே
கையாலே அவனெடுக்கக் கவிழ்கிறது பூமியிலே

இதுவும் அதிசயந்தான் இவ்வேணி வந்தவிதம்
பரிய வசியேறிப் பாதவிக்கும் மன்னனிவன்
ஆரோ தெரியாது அருமை குலைகின்றான்
என்றெண்ணி யவன்குடுமி ஏட்டை அவிழ்த்தெடுத்து
வாசித்துப் பார்த்ததனால் மனமுங் கொதித்தெழும்பி
ஐவரையும் ஓட்டிவிட்ட அரும்பாவி யிவனலவோ
பாண்டவரை ஓட்டிவிட்ட படுபாவி இவனலவோ
எந்நாளும் அவர்மேலே வஞ்சம் தொடுக்கின்றான்
பெண்களைச் சிறைபிடிக்கப் பெரும்பாவி வந்ததனால்
மாதரைச் சிறைபிடிக்க மாபாவி வந்ததனால்

### மேகராஜன் ஏணியைக் காலால் உதைத்தல்

நாடாளுங் கன்னியவள் நல்லதொழில் செய்தாளே
என்று மனம்பொங்கி ஏணியை யிடக்காலால்
எட்டி உதைத்துமிநீர் எச்சிலைக் குத்தாகக்
காறி யுமிழ்ந்தானே ஏறின தவ்வேணி
சுழன்று சுழன்றுசுழன் றெழும்பிப் பறக்கிறது
சூரிய மண்டலத்தில் சுறுக்காய்ப் பறக்கிறது
குய்யோ முறையோ வெனக்கூச்சல் இடுகின்றான்
ஐயோ சிவனே எனவபயம் இடுகின்றான்
துரியன் படுபாவி துன்பமுற்று வருகின்றான்
மதுரைக் கொலுமுகத்தில் வந்துவிட்ட தவ்வேணி
வந்து விழுந்தவுடன் மாதாசி ஓடிவந்து
கொத்துப் பிரம்பாலே பாவியைச் சாடுகிறாள்
அவன்,
செத்தேன் சிவபாதம் சேர்ந்தேன்தா யேயென்றான்
தச்சர் தமையழைத்தாள் தையலல்லிப் பெண்பெருமாள்

### ஏணியைப் போக ராஜனுக் கனுப்புதல்

போகரா ஜன்பதிக்குப் போக்குங்கள் இப்பொழுதே
என்று ளதுகேட்டார் ஏணியை முறுக்கிவிட்டார்

அது,
சிட்டுக் குருவியைப்போல் சிவ்வென்று பறக்கிறது
மேகம் பறப்பதுபோல் வேகமாய்ப் பறக்கிறது
சுழன்று சுழன்றுசுழன் றேறிப் பறந்துசென்று
திட்டென்று விழுந்ததுவே தீயிற் புழுவே போல்
போகரா ஜன்பயந்து புதுமையென்னென் றோடிவந்தான்
ஆரோ தெரியாது அருமை குலைகின்றான்
குத்துயி ரோடிவனும் மெத்த வருந்துகின்றான்
என்று மனதிலெண்ணி இரக்கம் பெரிதாகி
இவன்,
குடிமியில் ஓலைதனைக் கொண்ட விதமென்ன
என்றே அதிசயமாய் ஏட்டை அவிழ்த்தெடுத்து
வாசித்துப் பார்த்தபின்பு வயணந் தெரிந்துகொண்டு
துரோகியிச் சண்டாளன் துன்மார்க்க னென்றுசொல்லிக்
கபடம் பிறந்ததனால் கனமுங் குலைந்ததந்தச்
சந்திர நற்குலத்தின் தவமும் அழிந்ததிந்த
மூர்க்கன் பிறந்தபின்பு முறைமை யழிந்ததிவன்
அண்ணனுக்குந் தம்பியர்க்கும் அழிம்புகள் செய்யவெண்ணி
அயலாரைப் போலவரை அநியாயஞ் செய்யவெண்ணிப்
பேருலக வாழ்வைநம்பிப் பெண்டுகளைக் கெடுக்கவந்தான்
அழிம்புசெய்ய வந்தவனை அல்லியம்மாள் கூர்வசியில்
மாட்டிவிட்டிவ் வேணியிலே ஓட்டிவிட்டாள் இவ்விடத்தில்

## போகராஜன் ஏணியைக் காலால் உதைத்தல்

என்றந்த ஏணிதனை எட்டி யுதைத்துவிட்டுக்
காறி யுமிழ்ந்தாரே காற்றாய்ப் பறந்ததது
தேன்மொழி செய்தவிதம் திவ்யமா யிருக்கிறது
என்றார் அதற்குள்ளே ஏணியும் மேலெழும்பி
அந்தர மார்க்கமாகச் சந்திர மண்டலத்தில்
பட்டம் பறப்பதுபோல் பருந்து பறப்பதுபோல்
சுழன்று சுழன்றுசுழன் றெழும்பிப் பறக்கிறது

ஆவி துடிக்கிறது அரசன் துரியனுக்கு
இறைச்சி பதைக்கிறது இறைவன் துரியனுக்கு
அபயக் குரலுடனே அவனும் பறக்கின்றான்
ஏணியும் அவனுமாய் ஏந்திழையாள் காலண்டை
வந்து விழுந்தவுடன் வந்தானா படுபாவி
என்று பிரம்பெடுத்துச் சாடுகிறாள் பெண்பெருமாள்
பல்லைத் திறக்கின்றான் பரிதாபம் காட்டுகின்றான்
தலையை அசைக்கின்றான் தயவுசெய்ய வேண்டுகின்றான்
சித்ரவதை செய்யாதே சீமாட்டி யென்கின்றான்
என்,
பிராணன் வதைகிறது பெருவீச்சாய் வீசிவிடு
எந்நேர மாய்ப்பொறுப்பேன் என்னுயிர் போகவில்லை
அடிகள் படுகிறதே அங்கந் துடிக்கிறதே
அபயம் அபயமம்மா அல்லிமலர் நாயகியே
அடியேன் உனதபயம் என்றே அலறுகிறான்
ஏந்திழையா ளல்லியம்மாள் இவன்முறையைக் கேட்டதற்குப்
[1] பத்துமோ ரெட்டாகப் பதினெட்டுஞ் சென்றபின்பு
வெற்றி மதம்படைத்த வீம ரிருக்கின்றார்
வெட்டிப் பிளந்துன்னை வீரபலி போடுதற்குப்
பதறிநான் வெட்டிவிட்டால் பாரதம் பிசகுமென்றாள்

### ஏணியைச் [2]சேராம்பூ ராஜரிடம் அனுப்புதல்

ஏணியை ஓட்டவெண்ணி ஏந்திழையாள் அப்போது
தச்சர் தமையழைத்துத் தாழ்க்காமல் ஏணியைநீர்
சேராம்பூ ராஜரிடம் செலுத்துவீர் எனவுரைத்தாள்
அப்படியே தச்சர்களும் அதனை முறுக்கிவிட்டார்
அது,
நெட்டிப்ப றக்கிறது நீள்வான் குருவியைப்போல்
ஒட்டிப் பறக்கிறதே உயர்வான் குருவியைப்போல்

---

[1] பத்துமோரெட்டாகப் பதினெட்டு $=10+8=18$
$=18$ நாள் சண்டையில் கடைசிநாளில்.

[2] பவளக்கொடியின் தந்தை மார்கள்.

பறந்து பறந்துபறந் தேறிச் சுழல்கிறது
சுழன்று சுழன்றுசுழன் றெழும்பிப் பறந்துசென்று
காற்று விசையாலே கடுகப் பறந்ததுவே
துரியன்,
தலைவிரி கோலமாகத் தானே பறப்பதுபோல்
ஏணியுந் தானுமாக இடியிடித்து விழுவதுபோல்
பறந்து விழுந்தானே பவளக் கொடிநகரில்
சோரம்பூ மன்னர்கள்தம் சிங்காரக் கொலுவின்முன்னே
குப்புற வேகவிழ்ந்து குபீரென்று விழுந்தானே
அவன்,
அதிர்ந்து விழுகையிலே அரசர்கள் கண்டார்கள்
ஐம்பது ராஜர்களும் அதிசயமாய் ஓடிவந்தார்
ஏணியும் காவலனும் எதிரிருக்கக் கண்டார்கள்
ஆகாய வல்லிடிபோல் அதிர்ந்துவிழக் கண்டார்கள்
ஓடிவந்து பார்த்தார்கள் ஊன்றினார் கையாலே
ஏணியைக்,
கையாற் பிடிக்கையிலே கவிழ்கிறது பூமியிலே
ஆடுங் குடுமியிலே அதிகாரி ஓலைதனைக்
கண்ட வுடனதன்றன் கட்டவிழ்த்துப் படித்தார்கள்
பெண்கள்,
சிறைபிடிக்கக் சுயோதனன் தென்மதுரை வந்ததுவும்
ஐவர் மனைவியரை அழிம்புசெய்ய வந்ததுவும்
அவன்,
அகந்தை அடக்கவந்த ஏணியைச் செய்ததுவும்
தெரிந்து நகைத்தார்கள் சோரம்பூ ராஜாக்கள்
நன்றாகச் செய்தாளே நாடாளுங் கன்னியவள்
முறைதப்பி வந்ததனால் மூண்டதிந்தக் கேடிவற்கு
வரிசை தப்பி வந்ததனால் வந்ததிந்தக் கேடிவற்கு
கேடு நினைத்தவற்குக் கிடைத்ததிந்த பெரும்பலன்தான்
பொறுப்பாரோ நல்லார்கள் பொறுக்காத கோபமுற்றால்
உயிருக்கே தீம்புவா உலைதேடி வைப்பார்கள்

அநேகநாள் பொறுத்தார்கள் ஐவரந்த மன்னவர்கள்
பலநாள் பொறுத்தார்கள் பாராளும் மன்னாவர்
அவர்கள் மனதிலிது மூளுமே அக்கினியாய்
ஆலோசனைசெய்தாள் அல்லிமலர்ப் பெண்பெருமாள்
செய்தாலுஞ் செய்தாளே பேரிருக்கச் செய்தாளே
தெண்டனை தகுந்ததென்று செய்தாள்காண் தேன்மொழியாள்

## சேராம்புராஜர் ஏணியைக் காலால் உதைத்தல்

என்றார்கள் அந்தமன்னர் ஓலையை அவன்தலையில்
நன்றாக முடிந்தார்கள் நாடியந்த ஏணிதனைக்
காலா லுதைத்தவுடன் காற்றாய்ப் பறந்ததது
மேலே சுழன்றெழும்பி வேகமாய்ப் பறந்ததனால்
அபயம் அபயமென்றான் அல்லியின் கொலுமுகத்தில்
குப்புற ஏணியுடன் கொற்றவன் விழுந்தானே
விழுந்ததை அல்லியம்மாள் விழியாரக் கண்டவுடன்
தீராத கோபமது போரா முடிந்ததுபோல்
தச்சர் களையழைத்துத் தையலவள் அவசாமாய்த்
துஷ்டனிந்த பாதகனைத் துவாரகைக் கனுப்புமென்றாள்

## ஏணியை ஸ்ரீ கிருஷ்ணனிடத்திற்கு அனுப்புதல்

அவர்கள்,
அப்படியே நல்லதென்றார் ஆணியை முறுக்கிவிட்டார்
விசையாய்ப் பறந்ததது விண்ணிற்காற் றாடியைப்போல்
சுழன்று சுழன்றுசுழன் றேறிப் பறந்தாடி
ஆகாய வழியோடி ஆயன் பதிதேடி
கிருஷ்ணன் கொலுமுகத்தில் கிறுகிறு கிறுவென்று
சுழன்று விழுந்ததது தொப்பென்று பூமியின்மேல்
அறிந்துமறி யாதவன்போல் அச்சுதன் ஓடிவந்தான்
எல்லாரும் அவனுடனே ஏணியண்டை ஓடிவந்தார்
என்ன அதிசயமோ இவ்விடத்தில் விழுந்ததிது
ஓர்,
ஏணியுமா ளுமாக இவ்விடத்தில் விழுவானேன்

என்றுரைத்துக் கிட்டவந்தார் ஏணியைத் தொட்டார்கள்
தொட்டவுடன் அவ்வேணி தோய்ந்தது பூமியிலே
குப்புறக் கீழ்விழுந்து கொற்றவனைச் சாய்த்ததது
கொற்றவன் சாய்கையிலே மற்றவன் குடுமியிலே
தொங்குகிற ஓலைதனைச் சுறுக்காகத் தானவிழ்த்து
வாசித்துப் பார்த்தானே கோபால கிருஷ்ணனவன்
தனது,
தங்கையின் கற்பதனை பங்கப் படுத்தவந்த
துஷ்டன் படுபாவி சுயோதனன் எண்ணினதும்
ஆதிநாள் முதலாக அவள்மேலே ஆசையென்று
மதப்பட்ட மன்னனவன் வஞ்ச நினைவதனால்
ஐவரில்லா வேளையிலே அழிம்புசெய்ய வந்ததுவும்
அதனால்,
மதுரைத் துரைச்சியல்லி மலரிற் பிறந்தமங்கை
கோபம் பெரிதாகிக் கொற்றவனை ஏணியின்மேல்
ஏற்றினதும் ஏணிதனைக் கண்டவர்கள் காலாலே
உதையுங்கள் காறிநன்றாய் உமியுங்கள் என்றெழுதி
ஓலை அனுப்பியதும் உலகளந்தான் தெரிந்துகொண்டான்
இப்படியுஞ் செய்வானோ என்னுடைய தங்கைதனை
ஆளனில்லாப் பெண்டுகளை அழிம்புசெய்ய நீதியுண்டோ
கணவனில்லாப் பெண்டுகளைக் கற்பழிக்க நீதியுண்டோ
கற்புடைய பெண்டுகளைக் கருதவும் நீதியுண்டோ
ஆகையி னாலிவற்கே அழிம்புவந்து நேர்ந்ததென்றான்
கேடு நினைப்பவனே கெடுவா னெனப்பெரியோர்
வழங்கும் மொழியிவனால் வாய்மை யெனவுணர்ந்தேன்
என்று மனதிலெண்ணி ஏணியில் வருந்துகின்ற
ஈடழிவான் தனைநோக்கி இரக்கஞ் சிறிதுமின்றி
மோகந் தணிந்தனையோ முடிதரித்த மன்னவனே
சோகந் தணிந்தனையோ சுயோதன மன்னவனே
கன்னி சுபத்திரையின் காதல் தலைக்கேறி
வருத்தப் படுமுனது மகிமை அறியாமல்

அவஸ்தைப் படுகிறவுன் அருமை தெரியாமல்
கஷ்டப் படுமுனது காதல் உணராமல்
நீ,
வசியணைய வைத்தாளே மதுரைத் துரைச்சியவள்
ஆசை பதிந்தவுன்மேல் ஆணி பதியவைத்தாள்
இச்சை பதிந்தவுன்மேல் இரும்பு பதியவைத்தாள்
நீ,
தொட்டுத் தழுவுதற்குத் துறட்டுமுள் வைத்தாளே
கட்டித் தழுவுதற்குக் கழற்றாணி வைத்தாளே
ஏணியாம் வாகனமும் ஏறி யுலாவவைத்தாள்
இத்தனை நன்றியந்த ஏந்திழையாள் செய்தாளே
இத்தனை கீர்த்திபெற்றோர் இவ்வுலகில் ஆருமில்லை
பிறர்,
காறி யுமிழ்வதுவே கனமுனக்கா மென்றெண்ணி
இப்படிச் செய்தாளே அல்லியம்மா ளென்றுசொல்லி
ஓலைச் சுருள்முடித்தான் ஊதாரி குடுமியிலே
சந்தோஷ மோவுனக்குச் சமர்த்துள்ள மைத்துனனே
உடம்பெல்லாம் பூரித்துள் ளம்பொங்கி வழிகிறதோ
இன்பம் பெரிதாக ஏணியிற் காண்கிறையோ
உன்னைக்,
காறி யுமிழ்வதெல்லாம் கஸ்தூரி யின்மணமோ
எட்டி யுதைப்பதெல்லாம் மட்டில் புகழ்தானோ
இப்படிப் புகழ்படைத்த என்னுடைய மைத்துனன்நீ
ஏணியாம் வாகனத்தில் ஏறியிங்கு வந்ததனால்
வெகுமதி என்னசெய்வேன் தகுதியா யுன்றனக்கு

### ஏணியைக் கிருஷ்ணன் தனது காலால் மண்ணைத் தூவிப்போக்குதல்

இவ்,
ஓலையிற் கண்டிருக்கும் உற்ற வெகுமதிபோல்
ஒருமுறை எல்லாருங் காறி உமிழ்ந்தார்கள்
நான்,
இரட்டை வெகுமதியாய் இருமுறை உமிழ்கின்றேன்

என்னாலே இவ்வளவே காரியம் ஆகுமடா
என்றுசொல்லி நன்றாகக் காறி இவன்முகத்தில்
நாமுமிந்தால் பாவியிவன் நலம்பெற்றுப் போய்விடுவான்
என்று மனதிலெண்ணி [1]இடைய உமிழ்ந்துவிட்டுச்
சிரிப்பாச் சிரித்தானே ஸ்ரீகிருஷ்ண மாயனவன்
தனது,
காலால் உதைகொடுத்தால் கடைத்தேறிப் போய்விடுவான்
பாவி யவனென்று பாரளந்த காலாலே
மண்ணைக் கிளறிமெள்ளத் தூவினான் ஏணியின்மேல்
கடுகப் பறந்ததது காற்றாய் எழும்பியது
உயரப் பறந்ததந்த உச்சித ஏணிநன்றாய்ச்
சுழன்று சுழன்றுசுழன் றேறிப் பறந்துசென்று
விண்ணின் வழியாக வியன்மதுரை நகர்தேடி
வந்து விழுந்தது [2]மயிலியலாள் கொலுமுகத்தில்

## ஏணியை ஐவரிடத்தில் அனுப்புதல்

பார்த்தா ளிளங்கொடியாள் பாண்டிவள நாடுடையாள்
தாரார் புயமுடைய தருமருக் கோரோலை
மெத்தப் புகழ்படைத்த உத்தம மைத்துனரே
சுத்த மனமுடைய தூயவரே நமஸ்காரம்
மூத்தார் இருவருக்கும் இளையார் இருவருக்கும்
காண்டீப வில்லெடுத்த காதலர் ஒருவருக்கும்
எல்லார் தமக்குமன்பாய்ச் சாஷ்டாங்க தெண்டனிட்டுத்
தெரிவிக்கும் விண்ணப்பம் என்னவென்றால் தீயனிவன்
துரியன் படுபாவி சுழலேணி மேலேறி
அங்கே,
வந்து விழுந்தவுடன் மயங்காமல் நீங்களிவன்
குடுமியிற் கட்டியுள்ள ஓலையைக் குறிப்பாகப்
பார்த்தெடுத்துக் கொண்டதனைப் பக்குவமாய் வாசித்துச்

[1] இடைய=ஒட்ட.
[2] மயிலியலாள்=மயில்போலும் சாயலுடைய அல்லி.

சேதி தெரிந்தபின்பு தேன்மொழியாள் கலந்தாரி
நாயகிக்குச் சீமந்தஞ் செய்யுநாள் நெருங்கியதாம்
எட்டா வதுமாதம் பிறந்துவிட்ட திப்பொழுது
அவள்,
கர்ப்ப மசக்கையினால் கனிகள் விரும்புகின்றாள்
காட்டிற் பழுத்துதிரும் கனிவர்க்க மத்தனையும்
வேரிற் பழம்பழுத்து வெடித்த பலாப்பழமும்
கொச்சித் தமர்த்தைகளும் கொடிமுந் திரிப்பழமும்
மாதுளம் பழம்வாழைப் பழநெல்லிப் பழமாங்காய்
காட்டுமாம் பழமிலந்தை களாக்காய் விளாங்காய்கள்
அன்னதா ழம்பழம்பா லைப்பழம் நாரத்தை
கிச்சிலி முதலியவாம் இத்தனை விதப்பழமும்
பரிந்து பறித்தெடுத்துப் பாவி யிவன்முதுகில்
மூட்டையாய்க் கட்டிவிட்டு முறுக்குங்கள் ஏணிதனைக்
காலால் உதைகொடுத்தால் கடிமதுரை வந்துவிடும்
இங்ஙனம் உமதடியேன் அல்லி எனவெழுதி
உடனே அதைச்சுருட்டி ஒழுங்காகக் கொண்டுவந்து
கொற்றவன் குடுமியிலே கொம்பனையாள் முடித்த பின்பு
தச்சர் களையழைத்துத் தட்டுங்கள் ஏணியென்றாள்
ஐவர் இருக்கின்ற ஆரணியம் அனுப்புமென்றாள்
அப்படியே முறுக்கிவிட்டார் அவ்வேணி தனையவர்கள்
அது,
சுழல்காற்று பறப்பதுபோல் சுழன்று சுழன்றேறிச்
சிட்டுக் குருவியைப்போல் சீக்கிரமாய்ப் பறக்கிறது
பட்டம் பறப்பதுபோல் பறக்கிற தவ்வேணி
அந்தர மார்க்கமதில் சுந்தர மாப்பறந்து
காடு தனைத்தேடிக் கடுகப் பறந்தோடிப்
பஞ்சவர் வாழ்கின்ற வனத்திற் பரபரப்பாய்
அவர்கள் இருப்பிடத்தில் அதிர விழுந்ததது
பர்ணசா லைக்கருகே பறந்து விழுந்ததது
விழுந்த வுடனதனை வேந்தர்கள் கண்டார்கள்

சந்தன மார்பழகர் தருமரதைக் கண்டுவிட்டார்
மனது மிகக்கலங்கி வருத்தம் அதிகரித்தார்
இப்படிச் செய்தவர்கள் எவர்களோ நானறியேன்
ஆதீனக் கர்த்தனையிவ் வநியாயஞ் செய்தார்கள்
இவன்,
பக்கந் துடிதுடிக்கப் பரிய வசியேற
அங்கம் பதைபதைக்க ஆருயிர் தடுமாற
வைத்தார் தனையறியேன் வதைகிறான் என்னசெய்வேன்
அரகரா இதுவென்ன அநியாயக் காரணங்கள்
சிவசிவா இதுவென்ன தீவினை என்றுசொல்வேன்
ஆதீனக் கர்த்தனையிவ் வநியாயஞ் செய்தார்கள்
இவன்,
பக்கந் துடிதுடிக்கப் பரிய வசியேற
அங்கம் பதைபதைக்க ஆருயிர் தடுமாற
வைத்தார் தனையறியேன் வதைகிறான் என்னசெய்வேன்
அரகரா இதுவென்ன அநியாயக் காரணங்கள்
சிவசிவா இதுவென்ன தீவினை என்றுசொல்வேன்
என்றே இரங்கியவர் இருந்தார் [1]துரோபதையும்
நால்வர்கள் தம்பியரும் நன்றாய்ச் சிரித்தார்கள்
தருமருக்குப் பின்னிருந்து தாங்கள் சிரித்தார்கள்
குலுங்க நகைத்தாளே குருகுலப் [2]பாஞ்சாலி
எங்கேயோ பாவியிவன் இடும்புகள் செய்திருப்பான்
ஆரோ பலவான்கள் அடக்கினார் இவனகந்தை
என்று மனதிலெண்ணி எல்லாரும் நகைக்கையிலே
தருமர் மிகப்பதறித் தவிக்கின்றார் என்னசெய்வார்
உள்ளம் நடுநடுங்கி உடம்பெல்லாம் விபர்வைசிந்தச்
செய்வது தெரியாமல் திகைக்கின்ற வேளையிலே
கொற்றவன் குடிமியிலே குலுங்கோலை [3]தனைக்கண்டார்
தம்பி சகாதேவா தலைக்குடிமி ஓலைகளை

---

1 துரோபதை = திரௌபதி. 2 பாஞ்சாலி = திரௌபதி.
3 ஓலைதனை, என்றதனால் இரண்டு திருமுகங்கள் என்றுணர்க.

அவிழ்த்துப் படியென்றார் அவசரமாய்ச் சகாதேவன்
அப்படியே ஓலைகளை அவிழ்த்துப் படிக்கையிலே
அவன்,
சுபத்திரைமே லாசைகொண்டு துடுக்காக வந்ததுவும்
மாதரைக் கற்பழிக்க வலுவந்தம் பண்ணினதும்
அருச்சுனன் தேவியரை அழிம்புசெய்ய வந்ததுவும்
எழுபதொட்டைப் பொன்னதனை ஏந்திழைக்குத் தந்ததுவும்
அழிம்புசெய்ய வந்தவனை அல்லி யழிம்புசெய்து (அவ்)
ஏணியாம் வாகனத்தில் ஏற்றி யனுப்பியதும்
மற்றுள்ள வயணமெல்லாம் வரிசையாய்த் தெரிந்ததனால்
தருமர் மரம்போலே ஒருபக்கம் நின்றுவிட்டார்
வெற்றி மதயானை வீமனுக்கு மனங்கொதித்து
வச்சிர கதையெடுத்து மண்டை யுடைக்கவந்தான்
அர்ச்சுனன் தனக்கதிக கோபம் பெருகியதால்
இவனுயிரை யிப்பொழுதே யென்னம்புக் கிரைகொடுப்பேன்
என்று,
காலாக் கினிபோலே காண்டீபன் எழுந்திருந்தான்
நகுல சகாதேவர் நாகத்தின் விஷம்போலே
சீறிக் கொதித்தெழும்பிச் சிரசைத் துணிக்கவந்தார்
ஏந்திழையாள் பாஞ்சாலி யெரியுந் தழல்போலே
என்னைத் துகிலுரிந்த ஈடழிவான் படுபாவி
மற்றுமந்தப் பெண்களையும் வலதழிக்க வந்தானே
என்று மனங்கொதித்தாள் கோபித்தார் எல்லாரும்
தக்க புகழுடைய தரும ரதைப்பார்த்துப்
பொறும்பொறுந் தம்பியரே பொறுத்தால் குறைவருமோ
பொறுத்தார்கள் நாடாள்வார் பொங்கினார் காடாள்வார்
இவன்,
பெண்களை யழிக்கவந்தான் பெண்களால் சீர்குலைந்தான்
நெருப்புக்கு முன்னெதுவும் நில்லா விதம்போலக்
கற்புக்குக் குறைசிறிதும் காசினியில் நேராது
கற்பே பெருநெருப்பாம் கற்பே பெரும்புகழாம்

ஒருத்தி,
கானகத்து வேடுவனைச் சுட்டெரித்தாள் கற்பாலே
ஒருத்தி,
கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா என்றுரைத்தாள்
ஒருத்தி,
நெருப்பாற்றை நீர்போலக் குளிர்வித்தாள் கற்பாலே
ஒருத்தி,
புருஷன் தனைக்காக்கப் பொழுது விடியாமல்
இருக்க விதித்தாளே இணையில்லாக் கற்பதனால்
தெய்வந் தொழவேண்டாள் கொழுநன் தனைப்பணிவாள்
மழையே பொழியென்றால் பொழியுமே மாநிலத்தில்
என்றார் பெரியவரும் ஆதலால் கற்புடைய
பெண்களால் ஆகின்ற பிரபல காரியங்கள்
ஆண்மை மிகுந்திருக்கும் ஆடவர் தம்மாலும்
ஆகாது தம்பியரே ஆதலால் நம்முடைய
பெண்க ளிதுசெய்தார் பேருலகந் தமைவாழ்த்தப்
புருஷர் பழிதுடைக்கப் பூவையர்கள் செய்தார்கள்
கற்புடைய நமதுபெண்கள் பொற்புடனே செய்தவிது
போதும் இவனையின்னும் என்னசெய்யப் போகின்றீர்
அடாதன செய்தவர்கள் படாதன படுவரென்ற
பெரியோர் மொழியிவனால் பிரபலமாய் விட்டதனால்
இவன்,
படும்பாடே போதுமென்று பக்குவமாய் விட்டிவனைக்
கொல்லாமல் நீக்குவதே நல்ல தொழிலாகும்
என்று பலவிதமாய் இதவசனங் கூறியபின்
மற்றுமோர் ஓலைதனை வாசித்துப் பார்க்கையிலே
கட்டழகி மருமகட்குக் கலந்தாரி நாயகிக்குச்
சீமந்தஞ் செய்வதற்குத் தித்திக்கும் நற்கனிகள்
காட்டிற் பறித்தெடுத்துக் கட்டியொரு மூட்டைசெய்து
பாவி முதுகினிலே பக்குவமாய்க் கோத்தனுப்பி
வையுங்கள் மைத்துனரே என்றிருந்த சேதிதனைக்

கண்டு சிரித்தார்கள் காரிகையின் கையெழுத்தைப்
பார்த்துக் களித்தார்கள் பாராளும் வேந்தரவர்
அவள்,
மனதின் படியேநீ மதவீமா செய்யென்று
தனியே மிகவருந்தித் தருமர் நடந்துவிட்டார்
மதகரி வீமனவன் வனத்தில் நுழைந்துசென்று
காய்கனிகள் உள்ளதெல்லாம் கருத்தாய்ப் பறித்துவந்து
மூட்டை பெரிதாக்கி யழுந்த முடிந்தெடுத்துத்
துரியன் முதுகினிலே கோத்துச் சொருகிவிட்டுக்
காறி யவன்முகத்தில் உமிழ்ந்தான் அதன்பிறகு
காண்டீபன் ஓடிவந்து காறியுமிழ்ந்தானே
நகுலன் உமிழ்ந்தானே நல்ல சகாதேவன்
காறி யுமிழ்ந்தபின்பு காரிகை பாஞ்சாலி
காறி யுமிழ்ந்தாளே காவலன் பாழ்முகத்தில்
எல்லாருந் துப்பினார்கள் எழுந்தான் மதவீமன்

### வீமசேனன் ஏணியைக் காலாலுதைத்தல்

கோபம் அதிகரித்துக் குதித்துவந்தான் ஏணியண்டை
ஏணியைக் காலாலே எட்டி யுதைத்துவிட்டான்
அந்த உதையாலே ஏணி அதிர்ந்தெழுந்து
விண்ணிற் பறந்தெழும்பி மேலே சுழன்றுசென்று
மதுரை நகர்தேடி மயிலியலாள் கொலுமுகத்தில்
வந்து விழுந்தவுடன் பார்த்துவிட்டாள் மாதரசி
பல்லைத் திறந்துகெஞ்சும் பாதகனைப் பார்த்தவுடன்
காறி யுமிழ்ந்தாரோ காவலர்கள் உன்முகத்தில்

### ஏணியைக் கலந்தாரியிடம் அனுப்புதல்

உன்னைக்,
கொஞ்சத்தில் விடுவேனோ கொலைகற்ற பாதகனே
என்றுசொல்லி ஓலையொன்று கலந்தாரிக் கெழுதுகிறாள்
அன்னமே என்னுடைய அருமை மருமகளே
கலந்தாரி நாயகியே கட்டழகி உனைவாழ்த்தி

எழுதுவ தென்னவென்றால் இதனுடன் நானனுப்பும்
பழங்களை உன்னிடத்திற் பண்பாகச் சேர்க்கவல்ல
ஆள்கள் கிடையார்கள் அணிமதுரைப் பட்டணத்தில்
[1] அமஞ்சிக்கு நானிவனை ஆள்பிடித் தனுப்புகிறேன்
ஓலையைப் படித்ததனில் உள்ளதை அனுசரித்து
வந்த வழியாக இவனைநீ ஓட்டிவிடு
ஏணியைக் காலாலே எட்டியுதைத் தையானால்
காற்றாய்ப் பறந்துவந்து கடிமதுரை சேர்ந்துவிடும்
என்றெழுதி ஓலைதனை ஈடழிவான் சுயோதனன்தன்
குடிமியிற் பலமாக முடிந்துவிட்டுத் தச்சர்களை
அழைத்தந்த ஏணிதனை அங்கே அனுப்புமென்றாள்
அப்படியே ஏணிதனை முறுக்கிவிட்டார் கம்மாளர்
பம்பரம் போற்சுழன்று பருந்துபோ லேபறந்து
கலந்தாரி கோட்டையிலே கடுக விழுந்ததது
ஏணியுடன் மன்னவனை ஏந்திழையாள் கண்டுவந்து
வேடிக்கை யாமிதுவும் இவன்முதுகில் விளங்குகின்ற
மூட்டையின் விவரமென்ன குடிமியில் முடிந்துள்ள
ஓலைகளின் வயணமென்ன என்றுரைத்துக் கட்டவிழ்த்துத்
திருமுகத்தை வாசித்துத் திரியன் செயலுணர்ந்தாள்
மாபாவி செய்ததெல்லாம் வாசித் தறிந்துகொண்டாள்
இவன்,
எந்நாளும் பாண்டவரை ஈடழித்து வருகின்றான்
என்று மனம்வருந்தி எழிலான காய்கனிகள்
தனக்குவந்த வத்தனையும் தானவிழ்த்துக் கொண்டபின்பு
மாமாவே தென்மதுரை மாமி சுகந்தானோ
ஆரணியஞ் சென்றீரோ ஐவர் சுகந்தானோ
அவர்கள்,
கஷ்டந் தவிர்ந்துவந்து காசினியை ஆள்வாரோ
எனக்கென்ன சொன்னார்கள் என்னுடைய மாமன்மார்
பாண்டவர்கள் ஐவருக்கும் பக்ஷமோ என்மேலே

---

1 அமஞ்சி = கூலி கொடாமல் வாங்கும் வேலை.

உத்தமர்கள் இவருக்கும் உருக்கமோ என்மேலே
என்ன உரைத்தார்கள் எனக்கறியக் கூறுமென்றாள்
வருத்தம் பெருத்தழிந்து மண்ணிற் கிடக்கிறவன்
கலந்தாரி சொன்னதெல்லாம் காதாலே கேட்டவுடன்
பாண்டவர்மேல் வைத்திருக்கும் பக்ஷம் பெரிதாகி
எனது வருத்தத்தை யிவள்சிறிதும் எண்ணவில்லை
என்மேற் பரிதாபம் இவளுக்குக் கிடையாது
இவளை,
வளர்த்தவன் நானென்று மனதிலே எண்ணவில்லை
ஐவர்மேல் அன்புவைத்தாள் ஆசையாய்க் கேட்டாளே
என்று மனம்வெதும்பிப் பேசாமல் இருந்துவிட்டான்

### கலந்தாரி ஏணியைக் காலா லுதைத்தல்

மாது கலந்தாரி மயிலியலாள் அதுதெரிந்து
சீதனப் பொருள்களெல்லாம் சிதையாமல் தனக்குவந்து
சேர்ந்தன வென்றெழுதித் திரியன் குடுமியினில்
ஓலைகளை முடிந்து மாமாவே உத்தமரே
நான்,
செப்பு மொழியுமது திருச்செவியி லேறலையோ
நீர்,
வந்து நெடுநேரம் ஆயிற்று மாமாவே
என்றுதன் காலாலே ஏணியை உதைத்தாளே
ஆகாய மீதெழும்பி அந்தரத்தி லேசுழன்று
மதுரைக் கொலுமுகத்தில் பறந்துவந்து விழுந்ததது
மதுரைத் துரைச்சி மயிலியலாள் தான்பார்த்துக்

### ஏணியை அஸ்தினாபுரத்திற் கனுப்புதல்

கம்மாளர் களையழைத்துக் கடுகவந்த ஏணிதனை[1]
அஸ்தினா புரநகர்க்கு முறுக்கங்கள் என்றாளே
அப்படியே கம்மாளர் அதனை முறுக்கிவிட்டார்
அது,
மேலே சுழன்றெழும்பி விசையுடன் தான்பறந்து

---

1 ஏறலையோ = ஏறவில்லையோ என்பதன்மரூஉ.

காற்றுப்போ லேயெழும்பிக் கடுகவே பறந்தோடி
அஸ்தினா புரியினிலே அனைவருங் கூடியுள்ள
கொலுமுகச் சபையெதிரே விழுந்தது கோவேந்தர்
திடுக்கிட் டகங்குலைந்து திடுதிடென் றோடிவந்தார்
தமதரசன் ஏணியின்மேல் தவிப்பதைக் கண்டார்கள்
அரசாளு மன்னவனுக் கழிம்புவந்து நேர்ந்ததென்ன
பாராளு மன்னனுக்குப் பருவசி நேர்ந்ததென்ன
ஆர்செய்த கோலமென்றார் அனைவரும் பார்த்தார்கள்
காசிவள நாடுடைய கர்ணனும் [1] காங்கெயனும்
சகுனி சயிந்தவனும் தம்பிதுச் சாதனனும்
அசுவத்தா மன்விதுரன் அரிவை பெருந்திருவாள்
துரோணன் கிருபனுடன் எல்லாரும் சூழ்ந்தார்கள்
ஓலையைப் பிரித்ததனை உத்தமர் படித்தார்கள்
இதுவென்ன காரணமோ இவர்செய்த காரியந்தான்
தெரியாத புத்தியினால் சிறையெடுக்கப் போனதென்ன
அறியாத புத்தியினால் அகப்பட்டு முழிப்பானேன்
அடாதன செய்ததினால் படாதன படுகின்றார்
கற்புடைய பெண்களுக்குக் கணவனே தெய்வமென்று
கற்றோர் உரைப்பதனைக் காதாலே கேட்டிருந்தும்
தெரியாமற் போனதென்ன சீர்மையை ஆள்பவர்க்கு
தெய்வம் பொறுக்காது தீம்புவந்து நேர்ந்ததுவே
தெய்வம் பொறுத்தாலும் ஜெகதலம் பொறுக்காதே
ஐவர் பொறுத்தாலும் அல்லி பொருப்பாளோ
அடங்காப் பெருநீலி அல்லிமலர்ப் பெண்பெருமாள்
அவள்,
ஆளும் இடந்தனிலே அரசரிவர் ஏன்போனார்
பிறன்மனைப் புகுவானேன்பெரும்பாடு படுவானேன்
ஆராலே யாகுமிந்த ஆணி கழற்றுதற்கு (இவ்)
வேணிசெய்த கம்மாளன் இருந்தால் அதுமுடியும்
இதுவென்ன துன்பமென்றே எல்லாரும் அழுகையிலே

[1] காங்கெயன் = காங்கேயன் = வீட்டுமாசாரி = பீஷ்மாசாரி.

**சூரியன்,**

சருகுபோல் உடல்வதங்கித் தரையிற் கிடந்தானே
காசிவள நாடுடைய கர்ணன் அதுதெரிந்தான்
பெரிய மதியுடைய பெருந்திருவாள் அதுதெரிந்தாள்
இருவரும் வந்துநின்று சொல்லுகின்றார் ஏக்கமுடன்
நாங்கள் உரைத்ததெல்லாம் நயந்துநீ கேளாமற்
போனதனால் வந்ததிந்த பிழைமோசம் புத்திமதி
எத்தனையோ நாங்களுனக் கெடுத்தெடுத்துச் சொன்னோமே
எங்களா லானதெல்லாம் எடுத்துரைத்தோம் அப்போது
பேச்சை மதியாமல் பெண்களிடம் போனீரே
போன பலனுமக்குப் பொருந்தியது மன்னவரே
என்றுரைத்தார் அப்பொழுது பெருந்திருவாள் எண்ணிநன்றாய்க்
கர்ணன் தனைப்பார்த்துக் காவலரே தயவுசெய்து
கெடியான வார்த்தையொன்று கேளுமென்று சொல்லுகிறாள்
ஆர்க்கு மடங்காத அல்லிமலர்ப் பெண்பெருமாள்
பரிதாபம் பாராளே பைங்கிளியாள் விடமாட்டாள்
கோபந் தணியாது கொம்பே ரிடையாட்கு
தனியாக நீர்போனால் தமிழ்மதுரைப் பட்டணத்தில்
கர்ணுவ தாரென்று கடுத்த மனந்தெளிவாள்
இதமான வார்த்தைகளை இரக்கமா நீர்மொழிந்தால்
மனமிரங்கி அல்லியம்மாள் மாட்டிய வசியையெல்லாம்
பூட்டைத் தறித்துவிட்டுப் போவென்பாள் புண்யவதி
சூஸ்திரத்தைக் கழற்றிவிட்டுத் துரத்துவாள் மாதரசி
**இவரை,**
உயிருடன் தண்டிகைமேல் உத்தமரே நாமெடுத்துக்
கொண்டு வரலாகும் கொற்றவரே போமென்றாள்
அவ்வார்த்தை கேட்டவுடன் அங்கதேச அதிபதி

## கர்ணன் ஏணியைக் காலால் தட்டுதல்

மன்னவ னண்டைவந்து மனது மிகத்தளர்ந்து (அவ்)
ஏணிதனைக் காலாலே எட்டி யுதைத்துவிட்டான்

எட்டி யுதைத்தவுடன் ஏறிச் சுழன்றுசுழன் (று)
ஆகாய வழியாக அவ்வேணி போகையிலே
கூடத் தொடர்ந்தானே கொற்றவனுங் கர்ணனவன்
பல்லக்கு மேலேறிப் போகின்றான் நெடும்பயணம்
ஏணி பறந்துவந்து விழுந்தது மதுரையிலே
மாது கொலுமுகத்தில் விழுந்தது மரவேணி

## கர்ணன் மதுரைக்கு வருதல்

கர்ணனும் அதனுடனே கடுக நடக்கின்றான்
பாவியின் தீமைதனைப் பைங்கொடியாள் பொறுப்பாளோ
ஈடழிவான் தீமைதனை ஏந்திழையாள் பொறுப்பாளோ
என்றெண்ணி முகம்வாடி ஏங்கி வருகின்றான்
இங்கே,
போரிற் சிறந்தமன்னன் [1] புலந்தரன் சொல்லுகிறான்
என்தாயே இவன்தனைநீ எப்போது விடுவாயோ
பார்க்க எனக்குமெத்தப் பரிதாபம் ஆகிறதே
இந்த வதைதனைநான் எந்நேரம் பார்ப்பதம்மா
ஆர்சொன்னா லேணியைநீ அவிழ்ப்பா யெனக்கேட்டான்
அதற்கு,
மதுரைத் துரைச்சியல்லி மனமிரங்கிச் சொல்லுகிறாள்
துவாரகா புரியரசர் கோபாலர் வந்துசொன்னால்
காசிவள நாடாளும் கர்ணரிங்கு வந்துசொன்னால்
அப்போது நானவிழ்ப்பேன் ஏணியை யென்றுரைத்தாள்
இப்படிப் பேசியிவர் இருக்கின்ற வேளையிலே
மதுரைக்கு வந்துவிட்டான் கர்ண மகாராஜன்
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் தன்னிடத்தில்
தாதியர்கள் ஓடிவந்து கர்ணர்வந் தாரென்று
சொன்ன வுடனந்தத் தோகை மனமகிழ்ந்து
பயபக்தி யுடனவரைப் பரிந்து வரவேற்றுப்
பொற்பீடம் போடுங்கள் புகழுடையார் வீற்றிருக்க

---

[1] புலந்தரன்=அல்லி மகன்.

என்றுரைத்தாள் அப்பொழுதே ஏகினன் கர்ணனவன்
கர்ணனைக் கண்டவுடன் கைதொழுதாள் அல்லியம்மாள்
ஆசனத்தின் மேலவனை அமர்த்தினள் அவற்குரிய
மரியாதை செய்தாளே மதுரைத் துரைச்சியவள்
இத்தனை தூரம்வந்த காரிய மென்னவென்றாள்
சொல்லுவேன் கேளம்மா சோதிவடி வுடையவளே
கல்வி தெரிந்தவளே காரணம் உணர்ந்தவளே
வித்தை அறிந்தவளே விவேகம் சிறந்தவளே
நன்மை மிகுந்தவளே ஞாயம் தெரிந்தவளே
கோபம்நீ வையாதே கொடியிடையே மலைமேலே கல்லை,
ஏற்றுவதோ அருமை இறக்கியதைத் தள்ளுவதோ
வெள்ளத்தைக் கட்டுவதோ வெளியேற வெட்டுவதோ
அருமை யெதுவெனநீ அறியாத விதமன்று
நீர்கிழிய வெய்ததொரு வடுப்போல மாறிவிடும்
சீரொழுகு சான்றோர்தம் சினமென்றார் பெரியோரும்
ஆகையி னாலேநீ கோபத்தை அடக்குவதே
உனக்குப் புகழாகும் உத்தமியே மாதரசே
மன்னன் நடத்தைகளை மாதாவே நானறியேன்
எனக்குத் தெரிந்தளவில் இதமவற்கு நானுரைத்தேன்
என்பேச்சைத் தள்ளிவிட்டான் எப்படியோ ரகசியமாய்
என்னை அறியாமல் இங்குவந்து தொங்குகிறான்
போகாதே போகாதே பொன்மதுரை அல்லியம்மாள்
உலகாளு மாதரசி உத்தமி அடைக்கலமா
சுபத்திரை முதலான தோகையர் இருக்கின்றார்
போனால் விடமாட்டாள் புகழ்மதுரை நாடுடையாள்
மரியாதை தாழ்வாகும் தெரியாமற் பேசுகின்றாய்
அந்த நினைவதனை அறவே மறவென்றேன்
என்னை யறியாமல் எப்படியோ இங்குவந்தான்
நானறிந்தே னாமானால் நலங்குலையான் மன்னனவன்

எனக்குத்,
தெரிந்திருந்தால் அவனையிந்தத் தீமையிற் றப்புவிப்பேன்
தப்பிவந் துன்னிடத்தில் அகப்பட்டு முழிக்கின்றான்
எலியழுது புலம்பினாலும் இறுகப் பிடித்தபிடி
பூனை விடாதென்று புகல்வது பொய்யாமோ
ஆனாலும் மாதரசே அறியாமற் சிறியோர்கள்
செய்த சிறுபிழையைப் பெரியோர் பொறுப்பதுவே
கடனா யிருப்பதனால் காளையவன் அறியாமல்
செய்த பெரும்பிழையைத் தேன்மொழியே பொறுத்தருள்வாய்
அவனை நீ,
செய்த அவகோலம் செப்புந் தரமாமோ
அவன்,
பட்டபா டத்தனையும் பன்னுந் தரமாமோ
கெட்டகே டத்தனையும் கேட்குந் தரமாமோ
காறியுமிழ வைத்தாய் கண்டோர் நகைக்கவைத்தாய்
ஏணியி லேற்றிவைத்தாய் எட்டி யுதைக்கவைத்தாய்
கட்டி யடித்தாயே காலால் உதைத்தாயே
சிரிக்க வுடம்படுத்தான் ஜெகத்தோர் பழிக்கநின்றான்
இத்தனை போதுமம்மா ஏந்திழையே இனியவனை
மன்னித்து விடவேண்டும் மாதாவே பாண்டவராம்
புண்ணியர்தம் மனைவியர்கள் பொறுக்கக் கடனன்றோ
உயிர்தப்பிப் பிழைக்கவிட்டால் உலகத்தில் கீர்த்தியுண்டு
பிராணனைத் தப்பவிட்டால் பேருலகிற் கீர்த்தியுண்டு
கற்புடைய மங்கையர்தம் பொற்பை அவனறியான்
குக்கல் உணராது குங்குமப்பூ வாசனையை
பன்றி யறியாது பழுத்தபழத் தின்சுவையை
என்ற படியுமது கற்பின் அருமைதனைப்
பாவி அறியாமல் பரிதவித்து வருந்துகின்றான்
விளக்கில் விழுந்திறக்கும் விட்டில்போல் விவேகமில்லாப்
பாவி யவனுமது பண்புடைய கற்பென்னும்
நெருப்பில் விழுந்ததனில் நெளிந்து வருந்துகின்றான்

அவனுக்குப்,
புத்திபண்ணி வைத்தனைநீ புகழுடைய சீமாட்டி
அறிவேற்றி வைத்தனைநீ அரியபெருங் கற்புடையாய்
கற்பு நிலைமையைநீ காட்டினுய் மன்னனுக்குக்
கற்பே பெருவாழ்வாம் கற்பே பெரும்புகழாம்
கற்பே அணியுடையாம் கற்பே அழகாகும்
கற்பே பெருநெருப்பாம் கற்பேயிவ் வுலகாகும்
கற்பே பலமாகும் கற்பாலா காதுமுண்டோ
எல்லாரும் உனைவாழ்த்தி யிவ்வுலகிற் கொண்டாட
உனது,
கணவர் புயமலைமேல் கற்பென்னும் பெருவிளக்கை
ஏற்றிவைத்தாய் ஆகையினுல் என்றென்றும் அழியாத
நற்பெயரை நீயெடுத்தாய் நல்லகுணப் பெண்ணரசே
இந்தமட்டும் போதுமிவன் பட்டபா டத்தனையும்
என்றன் முகம்பார்ப்பாய் இரங்கியருள் செய்வாயே
இனிமேல் அவனுயிரை இரக்க முடனளிப்பாய்
தயைசெய்வாய் உத்தமியே ஆணிகளைத் தறித்துவிட
உத்தரவு செய்திடுவாய் கற்பால் உயர்ந்தவளே
என்றே யிதமாகக் கர்ணன் உரைக்கையிலே

## மதுரைக்குக் கிருஷ்ணன் வருதல்

கிருஷ்ணனும் வந்துவிட்டான் கிளிமொழியாள் அரண்மனைக்குப்
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் அல்லியம்மாள்
சிங்கா தனமவற்குச் சீக்கிரம்போ டச்சொன்னுள்
இருவருக்குந் தெண்டனிட்டாள் எந்திழையா ளப்போது
பூவி லவதரித்த பொற்கொடியாள் சொல்லுகிருள்
மன்னரைவர் பாண்டவர்கள் வனவாசம் போனதன்பின்
ஆரிழை மாதரெல்லாம் அறைக்காவ லானுர்கள்
வெற்றிலை தின்னுமல் வெறும்பாக்கை வாயிலிட்டார்
சுக்குகடுக் காயுடனே துவர்ப்பாக்கை வாயிலிட்டார்
பார்மேற் புரண்டார்கள் பாய்மேல் படுக்கவில்லை

உண்ப தொருவேளை உறங்கார்கள் என்னசெய்வார்
எல்லாரும் என்னிடத்தில் அடைக்கலமா யிருக்கின்றார்
வருத்தப் படுமெமது கருத்தை அறியாமல்
தோகையர் படுகின்ற துன்பம் உணராமல்
துரியன் படுபாவி துரோபதையைத் துகிலுரிந்த
துஷ்டன் துடுக்காகத் தொன்மதுரை நகர்க்குவந்தான்
உனது,
பிறப்பையும் எண்ணாமல் சிறப்பையு நோக்காமல்
எனது,
பிறப்பையும் பாராமல் பெருமையை நோக்காமல்
அல்லியென் றெண்ணாமல் அருமையை நோக்காமல்
மெல்லியென் றெண்ணியென்றன் வீரத்தை நோக்காமல்
தருமரைச் செய்தபிழை தையலரைச் செய்யவந்தான்
என்றுகண் ணீர்ததும்ப ஏந்திழையாள் சொன்னதற்குக்
காசிவள நாடாளும் கர்ணன் மனமிரங்கி
பெண்பாவம் செய்தவற்குப் பேரிடிகள் தாமிடிக்கும்
நீபொறுத்தால் கெடுதியில்லை நேரிழையே கட்டவிழ்ப்பாய்
என்றுரைத்தான் அப்போது புலந்தான் ஓடிவந்தான்
ஓடிவந்த புத்திரனை உத்தமியாம் அல்லியம்மாள்
வாரி யெடுத்தணைத்து வாயார முத்தமிட்டு
அவனுக்குக்,
கிருஷ்ணனையுங் கர்ணனையுங் கிளிமொழியாள் காட்டியிதோ
இவரை,
மாமாவே என்றழைத்து மலர்தூவித் தெண்டனிடு
இவரை,
அண்ணாவே என்றுசொல்லி அடிபணிந்து தெண்டனிடு
என்றாள் அதுகேட்டான் இளையான் புலந்தரன்தான்
இவரை,
மாமாவே என்றழைத்து வணங்கத் தடையில்லை
இவரை,
அண்ணாவே என்றழைப்ப தெப்படி மாதாவே

இழிகுலத்தான் பிள்ளையென்றே எல்லாருஞ் சொல்லுகிறார்
தேர்ப்பாகன் பிள்ளையென்றே செப்புகின்றார் எல்லாரும்
தேர்ப்பாகன் பிள்ளையென்று தெரிந்திருந்தும் நானிவற்கு
தெண்ட னிடலாமோ சேவிக்க ஞாயமுண்டோ
என்றான் அதுகேட்டாள் இலங்கிழையாள் மனம்வருந்திக்
கோபம் பிறந்ததனால் கூறுகின்றாள் மைந்தனுக்குத்
தாமரை பொன்மருபூ சாமரை ஜவ்வாது
தேன்முத்து பால்புனுகு கோரோ சனைநெருப்பு (ஆம்)
இவைகள் பிறக்குமிடம் இழிவிடமே யானாலும்
மிக்க சிறப்புடனே மேதினியோர் கொள்ளுகின்றார்
அதுபோல நீயிவரை ஆராய்ந்து பாரிவர்க்கு
நல்ல குணங்களுண்டு நல்ல புகழுமுண்டு
நல்ல கொடையுமுண்டு நல்ல நடையுமுண்டு
நல்ல படையுமுண்டு நல்லார் இவர்தமைநீ
காண்பதுவும் இவர்சொல்லைக் கேட்பதுவுங் கருத்துடனே
இவருடைய,
குணங்க ளுரைப்பதுவும் இவருடனே குற்றமறக்
கூடி யிருப்பதுவும் குணமாகும் இவரைநீ
அண்ணா எனவழைத்தால் ஆயுள் வளருமன்றி
இந்தத்,
தூரியன் பிறந்தவிடம் பெரியவிடம் ஆனாலும்
கரியவிடம் பாற்கடலிற் கறுத்துப் பிறந்ததுபோல்
இவனுக்குக்
கெட்ட குணங்களுண்டு கெட்ட புகழுமுண்டு
கெட்ட கொடையுமுண்டு கெட்ட நடையுமுண்டு
கெட்ட படையுமுண்டு கெடுவான் இவன்தனைநீ
காண்பதுவும் இவன்சொல்லைக் கேட்பதுவும் கருத்துடனே
இவனுடைய,
குணங்க ளுரைப்பதுவும் இவனுடனே குணங்களுறக்
கூடி யிருப்பதுவும் குற்றமாம் இவனைநீ
அண்ணா எனவழைத்தால் ஆயுள் குறைந்துவிடும்

ஆகையாற் கர்ணனை நீ அண்ணா எனவழைத்துக்
கும்பிட்டாற் குற்றமில்லை குழந்தா யெனவுரைத்தாள்
மாதா சொல்தட்டாமல் மாலை முடியானும்
கிருஷ்ணனை,
மாமாவே யென்று மலர்தூவித் தெண்டனிட்டான்
கர்ணனை,
அண்ணாவே யென்றுசொல்லி அடிபணிந்து தெண்டனிட்டான்
வந்து பணிந்ததொரு மைந்தனைத் தான்பார்த்துக்
கர்ணன்,
கட்டி யணைத்துக் கனிவாயை முத்தமிட்டான்
மைந்தனைத் தன்மடியில் வைத்திருக்கும் வேளையிலே
ஆறாத கோபத்தை அடக்கினாள் அல்லியம்மாள்

## அல்லி ஏணியைக் கழற்றினது

கரைந்த தவள்மனது கனலிலிட்ட வெண்ணெயைப்போல்
உருகிற் றவள்மனது நெருப்பிலிட்ட அரக்கேபோல்
கூர்வசிக ளத்தனையும் கூசாமல் வாங்கிவிட
உத்தரவு செய்தாளே உலகாளும் அல்லியம்மாள்
சொன்னவுடன் தச்சரெல்லாம் துரிதமுடன் ஓடிவந்து
கூர்வசிக ளத்தனையும் குறிப்பாக வாங்கிவிட்டார்
பிராணனில்லாப் பொம்மையைப்போல் புரண்டழுதான் துரியனவன்
காயங்கள் பட்டிருந்த கபடனந்த சண்டாளன்
கர்ணன் முகநோக்கிக் கடுக வுரைக்கின்றான்
இந்தச் சிறுபயலை இறுகப் பிடித்தணைத்து
[1] முத்தி கொடுப்பதுபோல் முகத்தை நெரித்திவிடு
கட்டி யணைப்பதுபோல் கழுத்தை முறித்துவிடு
முளையிலே கிள்ளிவிட்டால் விளையா தொழிந்துவிடும்
என்றான் அதுகேட்டான் இளையான் புலந்தான்தான்
கர்ணனுக்கும் கிருஷ்ணனுக்கும் கண்காட்டிக் கூறுகின்றான்
அண்ணாவே நீர்சாக்ஷி அன்புடைய மாமாவே

---

[1] முத்தி=முத்தம்.

நீர்சாக்ஷி இப்போது நீசன் உரைத்ததற்கு (இவ்)
ஈனன் உரைத்தமொழிக் கிருவரும் சாக்ஷியென்றான்
அன்னைக்கு நான்போய் அறிக்கையிட்டு வருவனென்றான்
மைந்தனது கோபத்தை மாதவனுங் கர்ணனுந்தாம்
ஆற்றினார் தேற்றியன்பாய் அவனுக் கிதங்கூறி
மரத்திற் பழுத்தபழம் மரத்தடியில் விழுவதுபோல்
அவனவன் செய்தபிழை அவனவனைச் சேருமென்றார்
இவன்,
வாதனை வேதனையை மறந்துவிட்டுச் சொல்லுகிறான்
பட்டால் தெரியும் பறையனுக் கென்றுசொல்வார்
பட்ட துயரத்தைச் சற்றும் நினையாமல்
எத்தனைதான் தேய்த்தாலும் பித்தளைக்குத் தன்னாற்றம்
போகா விதம்போலப் போக்கிலி பேசுகிறான்
பாவியுரைத்த சொல்லைப் பாவைக்குச் சொல்லாதே
உன்,
அன்னை யிதுகேட்டால் அப்போதே இவனைவெட்டி
இருதுண்டாய்ப் போட்டிடுவாள் ஈரல் குலைசரிப்பாள்
இந்தப்,
படுபாவி சொன்னசொல்லைப் பார்மைந்தா மறந்துவிடு
வருத்தப் படவேண்டாம் என்றார்கள் மடிமேலே
கர்ணன்,
அணைத்த படியவனை அப்பால் விடவில்லை

## கர்ணனும் துர்யோதனனும் அஸ்தினாபுரம் வருதல்

இங்கு நடந்தசெய்தி இளங்கொடிக்குத் தெரியாது
கர்ணன் செலவுபெற்றுக் கடுகப் பயணமானான்
அல்லியை மெச்சிமெச்சி அங்கர்கோன் மனமகிழ்ந்தான்
துரியனை,
மெதுவாகத் தூக்கிவந்து மெல்லணை மேல்வளர்த்தி
பல்லக்கி லேற்றியதைப் பட்டாடை யால்மூடி
ஆட்கள்,
தூக்கினார் சிவிகைதனைத் தோண்மேலே தாங்கிவந்தார்

ஹஸ்தினா புரந்தனிலே அவனைச் சுமந்துவந்தார்
அரண்மனைக்குக் கொண்டுசென்றார் அவனைப் படுக்கவைத்தார்
காயங்க ளாறுமட்டும் காவல் புரிந்தார்கள்
அவன்,
காயங்க ளாறியபின் கனமாக வாழ்ந்திருந்தான்
தன்னரசைத் தானாண்டு மன்னன் சுகித்திருந்தான்
ஏணியேற் றம்மிதனை எல்லாரும் தாம்படிக்க
வித்தை மிகுந்துவரும் விவேகம் விளங்கிவரும்
நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்று மிடும்பைதரு மென்று தெரியவரும்
கெடுப்ப தொழியென்றும் கெடுவான் பிறர்கேடு
நினைக்கின் றவனென்றும் நிலவுலகில் பிறன்மனையிற்
புகாமை அறனென்றும் பெரியோர் புகன்றமொழி
உண்மையென் றுணரவரும் உத்தம நடக்கைவரும்
ஆல்போல் தழைப்பார்கள் அறுகுபோல் வேரோடிப்
பால்போல் மிகப்பொங்கிப் பாரிடத்தில் வாழ்வார்கள்
மூங்கில்போல் சுற்றமெல்லாம் முசியாமல் வாழ்வார்கள்
வேதியர் தாம்வாழி வித்வான்கள் தாம்வாழி
மேதினியை ஆளுகின்ற வேந்தர் மிகவாழி
மாந்தர் மிகவாழி மாதமும் மாரிபெய்து
பயிர்கள் மிகவாழி உயிர்கள் மிகவாழி
ஊழூழி தோறுமிந்த உலகைப் படைத்தளிக்கும்
ஈசனடி வாழி இசைந்து.

ஏணியேற்றம் முற்றிற்று.

